**87—ன் சிறந்த நடிகை:**

# "நடிப்புத்தான் முக்கியம்; நட்சத்திர அந்தஸ்து அல்ல!"



**ப**ரந்த ஹால். மிதமான சோபாக்கள். எளிமையான காட்டன் உடையில் அர்ச்சனா.

கண்கள். கண்கள். கண்கள்.

பொய்யின் கலப்பில்லாத, சந்தோஷமான கண்கள். இந்தக் கண்கள்தான் அர்ச்சனாவின் பெரிய ப்ளஸ் பாயிண்ட். பிறந்தது, வளர்ந்தது, படித்தது எல்லாம் சென்னை என்பதால், தடையில்லாமல் சரளமான தமிழ்.

''முதல் கேள்வி. ஒரு நடிகையிடம் கேட்கவே கூடாத கேள்வி. உங்கள் வயது என்ன?''

மின்னல் சிரிப்பு. ''பதினாறுன்னு பொய் சொல்ல இஷ்டமில்லே. வயசு இருபத்தொன்று.''

''இரண்டாவது கேள்வி நடிகையிடம் கேட்டே ஆக வேண்டிய கேள்வி. சினிமாலைனுக்கு எப்படி வந்தீங்க?''

ஆறு வயசிலேர்ந்து டான்ஸ் கத்துக்கறேன். கதக், பரதம் — டான்ஸ்னு அப்படி ஒரு இஷ்டம். என்னைச் சினிமாவிலே சேர்த்து விடணும்னு அம்மாவுக்குத்தான் ரொம்ப ஆசை. அவங்க தெலுங்குல ஆயிரம் தடவைக்கு மேல மேடை ஏறின நடிகை. பேரு சுசீலா. ஸோ, பத்தாவது வரை படித்து விட்டு அடையாறு பிலிம் இன்ஸ்டிட்யூட்டில் சேர்ந்தேன். பி. என். மேனன் 'மலைமுகம் இண்ட்டெ தெய்வம்' கற மலையாளப் படத்தில அப்ப என்னை அறிமுகப் படுத்தினார். அது பக்கா 'ஆர்ட் ஃபிலிம்.' இன்னி வரைக்கும் ரிலீஸ் ஆகலே...

''பாலு மகேந்திராவோட பார்வைல எப்படி...?''

''அது சுவாரஸ்யமான விஷயம். இன்ஸ்டிட்யூட்ல ரெண்டு நாள் நடிகர்களுக்குப் பயிற்சி முகாம் (Actors Workshop) நடத்தினாங்க. அதிலே ஒரு காட்சி. நானும், நாஸரும் கலந்துக்கிட்டோம். அமெரிக்காலேர்ந்து வில்லியம் க்ரீவ்ஸ்னு ஒரு டைரக்டர் அதைப் பார்வையிட வந்திருந்தார். எங்களோட நடிப்பைப் பார்த்து அவர் ரொம்ப சந்தோஷப்பட்டார். அவர்தான் பாலு மகேந்திரா சார்கிட்ட அழைச்சிட்டுப் போய் அறிமுகம் பண்ணினார்... 'நீங்கள் கேட்டவை'ன்னு பாலுமகேந்திரா சார் எடுத்த வியாபார ரீதியான படத்தில் கதாநாயகியா எனக்கு வாய்ப்புக் கொடுத்தார்...''



''பாலு மகேந்திராவோட படத்தில் மட்டும் நடிக்கணும்னு ஏதாவது கொள்கை வச்சிருக்கீங்களா, என்ன?''

''ஒரு கலைஞருக்குக் குறிப்பிட்ட ஒருத்தரோட சேர்ந்து பணியாற்றணும்னு ஆசை இருக்குமே தவிர, அவரோட மட்டுமே ஒர்க் பண்ணணும்னு கொள்கையிருக்காது. பல டைரக்டர்களோட, பல ஆர்ட்டிஸ்ட்டுங்களோட, பல பாத்திரங்களில நடிச்சாத்தான், உண்மையான கலைஞன்னு நிரூபிக்க முடியும். தமிழில் எனக்குப் பிடித்த கதாபாத்திரங்கள் இதுவரை தரப்படலே. அதனாலெ அதிகமா நடிக்கலே...''

''பிடிச்ச கதாபாத்திரம்னு எதைச் சொல்றீங்க?''

''பொதுவா இப்பல்லாம் தமிழ்ப் படத்தில நாலு பாட்டு, நாற்பத்தஞ்சு டிரெஸ்; இப்படி வந்திட்டு அப்படிப் போன்னு சொல்ற அளவுதான் கதாநாயகி வேஷம் இருக்கு. அப்படியில்லாம நல்ல, கனமான பாத்திரம் கெடைச்சா நான் ஏற்றுக் கொள்வேன். ஓர் உண்மையை எடுத்துச் சொல்லி, 'இதான் வாழ்க்கை'ன்னு விளக்கிச் சொல்ற படங்களைத்தான் நான் ரசிக்கிறேன்...''

'''கண்ணே கலைமானே'ங்கிற படத்தில் ரவிக்கையில்லாம வந்தீங்க... நூறடிக்கு ஒரு தரம் கையைத் தூக்கிப் போஸ் கொடுத்தது, ஒரு செக்ஸ் அப்பீலுக்காகத்தானே?''

''அது மலைஜாதிப் பெண் காரெக்டர்! நம்ம வாழ்க்கைல சாதாரணமா கொண்டை முடியறதுக்கும், மேல இருக்கிற பொருளை எடுக்கிறதுக்கும் கையைத் தூக்கறதில்லையா, அது எப்படி செக்ஸாகும்?''

''மூன்றரை வருஷமா சினிமாத் துறையிலே இருக்கீங்க... உங்களுக்கு அப்புறம் வந்தவங்க பல பேர் பெரிய ஸ்டார் ஆயிட்டாங்க... ஆனா நீங்க இன்னும்...''

''நான் போட்டி போடற ஸ்டாரா ஆகணும்னு என்னிக்குமே விரும்பினது கெடையாது... ஒரு நல்ல நடிகையா ஆகணும்னு தான் எனக்கு ஆர்வம். இப்ப எல்லோருக்கும் ஆச்சரியமாயிருக்கு... 'என்ன பண்ணிட்டான்னு இவளுக்கு அவார்டு கொடுத்தாங்க'ன்னு...''

''ஸ்டாராகிற வாய்ப்பு வந்தால், ஏற்றுக் கொள்ள மாட்டீர்களா?''

''வாய்ப்புக் கெடைச்சா ரொம்ப சந்தோஷம்தான்...''

''சினிமாத் துறையைப் பற்றி என்ன நினைக்கிறீங்க?''

''நான், எங்கம்மா, எங்க தாத்தா எல்லாரும் பொறக்கறதுக்கு முன்னாலேயே இந்த இண்டஸ்ட்ரி பொறந்துடுச்சி. அதனாலெ சினிமா உலகத்தைப் பற்றி விமர்சனம் பண்ணற தகுதியும், பக்குவமும் எனக்கு நிச்சயம் கெடையாது...''

'''வீடு' படம் பற்றி...?''

''படத்தோட முதல் நாள் ஷூட்டிங் முடிஞ்சதும் டைரக்டர் சார், மொத்தப் படத்தையும் அலசினார். ஒவ்வொரு ஸீன், ஒவ்வொரு ஷாட் பற்றியும் விளக்கிச் சொன்னார். ரொம்ப த்ரில்லிங்காக இருந்தது. படத்துக்கோ, போட்டோகிராபிக்கோ, இல்ல, தாத்தாவா நடிச்சவருக்கோ அவார்டு கெடைக்கும்னு நெனைச்சேனே தவிர, எனக்குக் கிடைக்கும்னு நான் எதிர்பார்க்கவேயில்லே...''

''படத்தில் உங்களுக்கு ரொம்பப் பிடிச்ச ஸீன்?''

''காண்ட்ராக்டர் ஏமாத்தறப்ப, அதை மங்கான்ற பொண்ணு தட்டிக் கேட்டு, ஒரு விவாதம் நடக்கும் — அதுதான் நான் ரொம்ப ரசிச்ச காட்சி. படத்தில் அத்தனை கலைஞர்களுமே ரொம்ப நல்லாப் பண்ணியிருக்காங்க...''

''உங்கள் சொந்தவாழ்க்கைபற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்... நண்பர்களுக்காக நேரம் ஒதுக்க முடிகிறதா? காதல் அனு



• 'வீடு' படத்தில் ஒரு காட்சி

**அர்ச்சனா பற்றி பாலு மகேந்திரா:**

"சினிமாவில் நடிகர்கள் நடிக்கிறார்கள் என்று தெரியக் கூடாது. அன்றாட வாழ்க்கையின் மனிதர்களை, அவர்களுக்குத் தெரியாமலே காமிரா படம் பிடித்திருக்கிறதோ என்ற சந்தேகம், படம் பார்ப்பவர் மனத்தில் எழ வேண்டும். இதுவே உன்னதமான சினிமா நடிப்பு என்று நான் நம்புகிறேன்.

இந்தக் கலையில் அர்ச்சனா கைதேர்ந்தவர். நடிப்பில்லாத அந்த நடிப்பை அவரிடமிருந்து இலகுவாகப் பெற முடிகிறது. தொடர்ந்து நான்கு படங்களில் அவர் என்னுடன் பணியாற்றியிருப்பதும் இதற்கு ஒரு காரணமாய் இருக்கலாம். எனக்கு வேண்டிய நடிப்பு கிடைக்கும் வரை நான் விடுவதில்லை.

தங்களது தனிப்பட்ட இமேஜையும் பர்சனாலிட்டியையும் களைந்துவிட்டு, தாங்கள் ஏற்கும் பாத்திரமாகவே உரு மாற ஒரு சில நடிகர்களால்தான் முடியும்.



அர்ச்சனா இந்த வகையைச் சேர்ந்தவர். 'ரெட்டைவால் குருவி' — நிறைமாத கர்ப்பிணி, 'நிரீக்ஷணா' — ஆதிவாசிப் பெண், இப்பொழுது 'வீடு' படத்தில் நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த உத்தியோகம் பார்க்கும் பெண்... இந்த மூன்று முற்றிலும் மாறுபட்ட பாத்திரங்களை இவர் கையாண்டிருக்கும் விதமே இதற்கு நல்ல உதாரணம்."

பவம்...?''

மின்னல்சிரிப்பு. ''எனக்கு அதிகம் நண்பர்கள் கிடையாது. இருக்கிற ஒண்ணு ரெண்டு பேரும் எளிமையானவங்க. குடும்பப் பாங்கானவங்க... ஃபிலிம் இன்ஸ்டிடியூட்டில் படிச்சப்போ எல்லாப் பெண்களுக்கும் ஏற்படற சில அனுபவங்கள் எனக்கும் ஏற்பட்டது. ஆனால் நான் ரொம்ப ஜாக்கிரதையா நடந்துக்கிட்டதால பெரிய பிரச்னை ஏதும் முளைக்கவில்லை. காதல்ல சிக்கியிருந்தா, இப்ப ஆக்ட்ரெஸ் அர்ச்சனாவா வந்திருக்க மாட்டேன். கல்யாணம் ஆகி, ஒரு வேளை ரெண்டு கொழந்தைங்க கூடப் பொறந்திருக்கும்!''

''ஆண்களைப் பத்திப் பொதுவா என்ன நெனைக்கறீங்க?''

நீளமான மௌனம். ''பொண்ணுங்கதான் ரொம்ப ஸென்ஸிடிவ்னு சொல்வாங்க. ஆனால் என்னைப் பொறுத்தவரைக்கும் ஆம்பிளைங்கதான் ரொம்ப உணர்ச்சிவசப் படறவங்க... சில சமயம் ஓவரா ரியாக்ட் பண்றவங்க. நான் சந்திச்ச வரைக்கும் ஆண்கள் நல்லவங்கதான். எனக்குப் பிடிக்காத மாதிரி எந்த ஆணாவது நடந்துக்கிட்டா, உடனே நான் 'கட்' பண்ணிடுவேன்...''

''புத்தகங்கள் படிக்கிறதுண்டா?''

''ஒரு சோர்வு, அல்லது கவலை ஏற்பட்டால் பாரதியார் கவிதைகளைப் படிப்பேன். புத்துணர்ச்சி கிடைக்கும்.''

''ரொம்பப் பிடிச்சது எது?''

''டான்ஸ்! மாடலிங் பண்றதும் ரொம்பப் பிடிக்கும்...''

''அர்ச்சனா இந்த சோப்பைத்தான் பயன் படுத்துகிறார்னு நீங்க பயன்படுத்தாத சோப்புக்கு விளம்பரமா நின்னு, அது ரசிகர்களை முட்டாளாக்கற வேலை இல்லையா?''

''விளம்பரம்னா என்ன? அட்வர்டைஸ்மெண்ட்! அது பிஸினஸ். அதில ஒண்ணும் தப்பு இருக்கிறதா நான் நினைக்கலே...''

''நீங்க ரொம்ப சந்தோஷமா இருந்த தருணம் எது? துக்கமா இருந்த தருணம் எது?''

''ஏப்ரல் பதினெண்ணு, '88. எனக்குத் தேசிய விருது கெடைச்ச செய்தி வந்ததே அன்னிக்குத்தான் நான் ரொம்ப சந்தோஷமா இருந்தேன்...''

''துக்கமா இருந்தது?''

''மனுஷன் வாழ்க்கைல எப்பவும் ஏதாவது சோகம் இருந்துக்கிட்டுத்தான் இருக்கும். சந்தோஷமா இருக்கிறப்ப துக்கத்தைப் பற்றி நான் நினைக்கறதில்லை. என் வாழ்க்கைல கிடைக்கலையேன்னு நான் எதுக்குமே ஏங்கி நின்னதா சொல்றதுக்கில்லே. நீங்க என்கிட்ட எதைக் கேட்டாலும் பாஸிடிவாகத்தான் பதில் சொல்லுவேன். 'ஐயோ பாவம் அர்ச்சனா'ன்னு யாரும் என்னைப் பற்றி நினைக்கிறதை நான் விரும்ப மாட்டேன்...''

— தயாரான, கூர்மையான பதில்கள். அர்ச்சனாவின் சந்தோஷம், கலகலப்பான சுபாவம், உடனிருப்பவர்களை உடனடியாகத் தொற்றிக் கொள்கிறது!

சந்திப்பு: **ஜெயமன்மதன்**

மேலட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்:

**கே. வி. ஆனந்த்.**



* இறால்கள்

# லாபத்தைக் குவிக்கும் இறால் பண்ணை!

உப்பு தயாரிக்கும் தொழிலை வெற்றிகரமாகச் செய்து வந்தார் ஹாமில்டன் மோத்தா. தூத்துக்குடியில், அவருக்குச் சொந்தமான உப்பளங்களில், சில சமயம் கடல் நீருடன் இறால் குஞ்சுகள் வந்து விழுந்துவிடும். இதைக் கண்ட ஹாமில்டன் மோத்தாவுக்கு 'நாம் இந்த இறால் குஞ்சுகளை வளர்த்துப் பார்த்தால் என்ன?' என்ற எண்ணம் ஏற்பட்டது. இறால் மீன்களுக்கு நல்ல கிராக்கி உண்டு என்றும் அவற்றுக்கு ஏற்றுமதி சாத்தியக் கூறுகள் அதிகம் என்றும் அவர் அறிந்திருந்தார். தூத்துக்குடி, Central Marine and Fisheries Research Institute மற்றும் கடல் உணவு ஏற்றுமதி வளர்ச்சி நிறுவனமான MPEDA ஆகியவற்றை அணுகி ஆலோசனை பெற்று, ஒரு ஹெக்டேர் நிலத்தில் இரண்டு குளங்கள் அமைத்து, இறால் பண்ணை ஒன்றைத் துவங்கினார். இப்போது ஏழரை ஹெக்டேர் நிலத்தில் பதினொரு குளங்கள் என்று அந்தப் பண்ணை விரிவடைந்திருக்கிறது; இங்கு உற்பத்தியாகும்



* பண்ணையில் உணவிடுதல்.



* ராஜாராம



* மோத்தா

இறால் மீன்கள் உள்ளூரில் விற்கப்படுவதோடு அயல் நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டு அன்னியச் செலாவணியை அள்ளித் தந்து கொண்டிருக்கின்றன!

ஹாமில்டன் மோத்தாவின் முயற்சியைப் பற்றி நமக்குத் தெரிவித்தவர்கள் தூத்துக்குடி மீன்வளக் கல்லூரி பேராசிரியர் டாக்டர் என். சுகுமாரன், மற்றும் உதவிப் பேராசிரியர் எஸ். பெலிக்ஸ். அவ்விருவரையும் சந்தித்தபோது, ''இறாலை 'Living Dollar' என்றுதான் மேல்நாடுகளில் அழைக்கிறார்கள். சாதாரண மீன், கிலோ பத்து ரூபாய் விற்றால், இறால் கிலோ நாற்பது ரூபாய் வரை விற்கும். விவசாயம், கால்நடை வளர்ப்பு போன்ற தொழில்களில் ஐயாயிரம் ரூபாய் லாபம் கிடைக்குமிடத்தில் இறால்

* குளத்துக்குக் கடல்நீர் பாய்ச்சும் வாய்க்கால்கள்.



வளர்ப்பு நாற்பதாயிரம் ரூபாய் வரை இலாபம் பெற்றுத் தரும்'' என்று இறால் வளர்ப்புத் தொழிலை வெகுவாகப் போற்றிப் புகழ்ந்தனர். இறால் வளர்ப்புத் தொழில் துவங்க விரும்புவோருக்கு வழிகாட்ட யோசனைகளையும் வழிமுறைகளையும் கூறினர்:

இறால் வளர்ப்புப் பண்ணைகள் அமைக்க ஏற்ற இடங்கள் கடற்கரையை ஒட்டிய காயல் பகுதிகள் (ஆற்றுத் தண்ணீர் கடலில் போய்க் கலக்குமிடம்), உப்பங்கழிப் பகுதிகள் ஆகியவை. சென்னைக்கருகிலுள்ள புலிக்கட் உப்பு ஏரியைச் சுற்றியுள்ள பகுதிகள், தஞ்சை மாவட்டத்தில் உப்பு எடுக்கும் பகுதிகள், தூத்துக்குடியில் பழைய காயல், புன்னைக் காயல் பகுதிகள், இன்னும் கன்னியாகுமரி மாவட்டத்தில் மணக்குடி அருகிலுள்ள பகுதிகள் ஆகியவை உகந்த இடங்கள்.''

''முதலில் இறால் வளர்ப்புக் குளங்களை அமைத்துக் கொள்ள வேண்டும். குளங்களின் அடிப்பகுதி சமதளமாகவும், களிமண் நிலமாகவும் இருக்க வேண்டும். மணல் நிலமாகவோ, அமிலத்தன்மை நிறைந்த நிலமாகவோ இருக்கக் கூடாது.



* ஆய்வுக் கூடம்.

* வெப்பத்தைக் குறைக்க ஓலைப் பந்தல்.



இதற்கு முதலில் மணல் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும்!

ஒரு ஹெக்டேர் நிலப்பரப்பில் இறால் வளர்ப்புக் குளங்களை அமைப்பதென்றால், முதலில் அந்நிலத்தை, நான்கு செவ்வக வடிவில் சமமாகப் பிரித்து அமைக்க வேண்டும். ஒவ்வொரு குளத்திலும் கடல் நீரை உள்ளே செலுத்துவதற்கு வசதியான குழாய்களும், அசுத்த நீரை வெளியேற்றுவதற்குரிய குழாய்களும் பொருத்த வேண்டும். குழாய்கள் வழியே இறால் குஞ்சுகள் வெளியேறி விடாமல் இருக்க, அவற்றின் வாயில் வலை கட்ட வேண்டும்.

இறால் குஞ்சுகள் முதல் ஒரு மாத காலம், குளத்திலுள்ள பாசிகள், மக்கிய பொருட்கள், நுண்ணுயிர்களை உணவாகக் கொள்கின்றன. ஆகவே, வளர்ப்புக் குளத்தின் தரை மட்டப் பகுதியை உழுது, பண்படுத்திப் பசுமையான படிவுகளாகப் பாசியை வளர்க்க வேண்டும். பிறகு, குளத்தில் முப்பது செ. மீ. உயரத்திற்குக் கடல் நீர்பாய்ச்ச வேண்டும். அடுத்து, இரசாயன உரங்களை இடவேண்டும். பிறகு நீர் மட்டத்தை எழுபது செ. மீ. ஆக உயர்த்த வேண்டும். உரமிட்ட பத்து முதல் பதினைந்து நாட்களில் தாவர மிதவை நு ண் ணு யி ர் க ள் (phytoplankton) பெருகிவிடும். நீரின் நிறமும் பச்சையாக மாறிவிடும். உடனே நீர் மட்டத்தை ஒரு மீட்டர் ஆக்கி, இறால் குஞ்சுகளை அதில் வளர விடலாம்!

''கடலும் ஆறும் கலக்கும் பகுதிகளில் ஏராளமான குஞ்சுகள் கிடைக்கும். அவற்றைச் சிறிய வலை மூலம் யார் வேண்டுமானாலும் தாராளமாகப் பிடிக்கலாம். ஒரு ஹெக்டேரில் 80,000 முதல் 90,000 குஞ்சுகள் வரை வளர்க்கலாம். சுமார் ஒரு மாத காலம் வரை, இறால் குஞ்சுகள், குளத்திலுள்ள பாசிப் படர்வுகள், நுண்ணுயிர்கள், மக்கிய பொருட்களை உண்ணும். அதற்கப்புறம்

* ஃபெலிக்ஸ், டாக்டர் குமாரன்.






மகாராஷ்டிர அரசு ஒவ்வொரு முறையும் பட்ஜெட் சமர்ப்பிக்கும் போது, அச்சடித்த பட்ஜெட், மற்றும் சொற்பொழிவை வி.ஐ.பி. பிரீஃப் கேஸில் வைத்து சட்டசபை அங்கத்தினர்களுக்குக் கொடுத்து வந்தது. 1981 முதல் இருந்து வரும் இந்தப் பழக்கத்தை இந்த ஆண்டு மாற்றி, குடிசைத் தொழில்களுக்கு ஆதரவு தரும் நோக்கில் 550 பைகளை வாங்கி அதில் போட்டு அரசு விநியோகித்தது. அவ்வளவுதான், பலத்த எதிர்ப்பு கிளம்ப, பைகளை வாபஸ் பெற்றுக் கொண்ட மகாராஷ்டிர அரசு, மறுபடி வி.ஐ.பி. பிரீஃப் கேஸ்களிலேயே பட்ஜெட் தாள்களை வழங்கியது. நீதி: குடிசைத் தொழில்களை ஆதரிப்பது வி.ஐ.பி.க்களுக்கு இடைஞ்சலில்லாத வகையில் நடக்கட்டும்.

ஆதாரம்: இல்லஸ்டிரேட்டட் வீக்லி.
தகவல்: சம்பத் குமாரி.

குளத்தில் நாம் உருவாக்கியிருக்கும் இயற்கை உணவு அவற்றுக்குப் போதுமானதாக இருப்பதில்லை. எனவே, மேலுணவாகச் செயற்கை உணவுகளை இட வேண்டும். புண்ணாக்கு, தவிடு, கழிவு மீன், ஆட்டு மாமிசக் கழிவு, கோதுமைத் தூள், கிழங்கு மாவு, உயிர்ச் சத்துக்கள், தாது உப்புக்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய கலப்புணவாகக் குறுணை வடிவில் (Pelletted form) இவ்வுணவு விற்கப்படுகிறது. ஒரு கிலோவிற்கு ரூ. 4.50. இந்த உணவை விலைக்கு வாங்கிக் கட்டுப்படியாகவில்லையென்றால்... நாமேகூடத் தயாரிக்கலாம். சென்னையிலுள்ள டாட்டா ஆயில் மில்ஸ் கம்பெனி, புலிக்கட் பக்கத்தில் பத்து ஹெக்டேர் பரப்பில் இறால் வளர்ப்புப் பண்ணையை அமைத்து... ஆண்டு தோறும் சுமார் இருபது டன் இறாலை உற்பத்தி செய்கிறது. அவற்றுக்கான செயற்கை உணவையும் அதே நிறுவனம் தயாரிக்கிறது. இறால் வளர்ப்புச் செலவில் சுமார் அறுபது சதவிகிதம் அதற்கு நாம் போடும் உணவிற்கே போய் விடும். தினசரி இரண்டு தடவை உணவு வைக்க வேண்டும். குளத்தின் மூலைகளில் ஒரு பிளாஸ்டிக் பக்கெட்டில் வைக்கலாம். அல்லது, குளத்தில் பரவலாகத் தூவலாம்.

"தினசரி, தண்ணீரிலுள்ள உப்புத் தன்மையின் அளவு, ஆக்ஸிஜன் அளவு, வெப்பம் — ஆகியவற்றைக் கவனித்து வரவேண்டும். வெப்பம் அதிகமாக இருந்தால்... குளத்தின் மேல் பரப்பில் ஆங்காங்கே ஓலைப் பந்தல்கள் போட வேண்டும். தண்ணீரில் ஆக்ஸிஜன் அளவு குறைந்திருந்தால்... அத்தண்ணீரை வெளியேற்றிவிட்டுப் புதிய தண்ணீரைக் குளத்திற்குள் விடவேண்டும். சில வேளை குளத்தில் ஹைட்ரஜன் சல்பைடு உண்டாகி... கெட்ட நாற்றமடிக்கும். இதற்குக் காரணம் அதிகப்படியான பாசிப் படர்வு படிவுகள் உருவாகியிருப்பதுதான். இதையும் கவனிக்க வேண்டும். ஆரம்பத்தில் டெக்னிக்கல் விஷயங்கள் தெரிந்த ஒருவரை மேற்பார்வையாளராக நியமிக்க முடிந்தால் நல்லது. ஒரு சிறு ஆய்வுக் கூடமும் அவசியம்!

"இறால் வளர்க்க யார் முன்வந்தாலும் அவர்களுக்கு ஆலோசனை வழங்க... வழிகாட்ட... ஒத்துழைப்புத் தர நாங்கள் தயாராக இருக்கிறோம்," என்றனர் டாக்டர் கருமாரனும் ஃபெலிக்ஸும்.

**மா**நில அரசின் மீன்துறை இலாகாவையோ (Fisheries Department) இறால் வளர்ப்பின் மேம்பாட்டிற்கெனவே தனியாக அமைக்கப்பட்டுச் செயல்பட்டு வரும் (Mariculture Section) என்ற பிரிவையோ, அல்லது மத்திய அரசாங்கக் கடல் மீன்வள ஆராய்ச்சி நிறுவனங்களையோ (Central Marine Fisheries Research Institute/Central inland Fisheries Research Institute) தூத்துக்குடியிலுள்ள மீன்வளக் கல்லூரியையோ, கடல் உணவு ஏற்றுமதி வளர்ச்சி நிறுவனத்தையோ (MPEDA) அணுகி ஆலோசனையும் நிதி உதவியும் பெற்று இத்தொழிலில் இறங்கலாம். 'NABARD' என்ற வங்கி இவ்வகை நிதி உதவிகளைப் பெருமளவில் செய்து வருகின்றது!

**ந**ம் நாட்டிலிருந்து ஆண்டுதோறும் ஏற்றுமதி செய்யப்படும் கடல் உணவுப் பொருட்களின் மதிப்பு சுமார் நானூறு கோடி ரூபாயாகும். இதில் பெரும் பகுதி இறால் ஏற்றுமதி மூலம்தான் கிடைக்கின்றது. ஆனால், சமீப காலமாகக் கடலிலிருந்து பிடிக்கப்படும் இறாலின் அளவு வெகுவாகக் குறைந்து வருகிறது. இவ்வேளையில் இறால் வளர்ப்புப் பண்ணைகளின் முக்கியத்துவம் அதிகரித்துள்ளது. இறால் வளர்ப்பை மேம்படுத்த அரசும் பல்வேறு திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்தி வருகிறது.

இவை ஒருபுறமிருக்க, ஹாமில்டன் மோத்தாவைச் சந்தித்தபோது அவர் இத்தொழிலில் லாபம் குறைந்து வருவதாகச் சொன்னார்:

# களைப்பும் தாகமும் உங்களை வாட்டும்போது உங்கள் உடலுக்குத் தேவை உடனடி சக்தி.

(வெறும் தாகம் தணிக்கும் பானம் அல்ல)

- க்ளூகோன்-ஸி யில் உள்ள க்ளூகோஸ், உங்களைச் சுறுசுறுப்புடன் வைக்க உடனடி சக்தி அளிக்கிறது.
- பற்கள், எலும்புகள், உடல் திசுக்கள் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு மிக முக்கியமானது, விட்டமின்-ஸி. அதன், ஒரு நாளைய தேவையின் மூன்றில் ஒரு பங்கை இது அளிக்கிறது.
- தயாரிப்பதும் சுலபம். நாலு முழு தேக்கரண்டி க்ளூகோன்-ஸி யை குளிர்ந்த தண்ணீரிலே கலக்கவும். ஆரஞ்சுச் சுவை கொண்ட, புத்துணர்ச்சியூட்டும் பானம் தயார்.

விலைமிக்க சர்க்கரை சேர்க்க தேவை இல்லை




ஆரஞ்சுச் சுவைகொண்ட, சக்தி பானம்

# க்ளூகோன்-ஸி

அருந்திய உடனே அளித்திடும் 'புத்துயிர்'

HTA 1648

# என் தாத்தா – இந்த வயதிலும் என்ன துடிப்பு !

தாத்தாவுக்கு வயதாகிக் கொண்டே போகிறது. உடம்போட செயலாற்றல் குறைந்து கொண்டே வருகிறது. அவர் இப்போது குறைவாகச் சாப்பிடுகிறார்.

**அவர் தனது ஊட்டச்சத்துக்களை காம்ப்ளான் மூலம் நிறைவு செய்கிறார்.**

எளிதாக ஜீரணிக்கக் கூடிய காம்ப்ளான், உங்கள் உடலுக்குத் தேவையான 23 ஊட்டச்சத்துணவுகளைக் கொண்டதாகும். தேய்ந்த உடல் திசுக்களைப் புதுப்பிப்பதற்கான பால் புரதம், சக்தி பெறுவதற்கான கார்போ-ஹைடிரேட்டுகள் மற்றும் கொழுப்புச்சத்து. உடல் நலத்திற்கான வைட்டமின் மற்றும் தாதுக்கள் ஆகியவற்றை கொண்டதாகும் காம்ப்ளான்.




**23**

மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

**காம்ப்ளான்®**

திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/47/213/TML

"முன்பு நாற்பத்தைந்து சதவிகிதம் லாபம் கிடைத்துக் கொண்டிருந்தது. தற்போது, இருபத்தைந்து முதல் முப்பது சதவிகிதம் தான் கிடைக்கிறது. முன்பு இந்தியாவி லிருந்துதான் ஜப்பானுக்கும் அமெரிக்கா வுக்கும் அதிகமாக இறால் ஏற்றுமதியாகிக் கொண்டிருந்தது. தற்போது, அந்த நாடுக ளுக்குச் சைனாவிலிருந்தும் தைவானிலிருந் தும் இறால் அதிகமாக ஏற்றுமதியாவதால்... வெளி மார்க்கெட் விலை குறைந்து விட்டது. மேலும், முன்பு MPEDA மூலம், இறாலுக் கான செயற்கை உணவு, கிலோவுக்கு ரூ. 2.50 என்ற பாதி விலையில் கிடைத்தது. அதையும் தற்போது நிறுத்தி விட்டார்கள். தற்போது, நானே சொந்தமாக இறால் செயற்கை உணவைத் தயாரிக்கிறேன். அதற்குக் கிலோவிற்கு ரூ. 4 வரை செலவா கிறது. குளத்திற்குத் தண்ணீரைப் பாய்ச்சு வதற்கு 'பம்பு செட்' வைத்திருக்கிறேன். அதற்குச் செலவாகும் மின்சாரத்திற்குத் தொழிற்சாலைக்குரிய கட்டணம் வசூலிக் கிறார்கள். அதே சமயம், இறால் வளர்ப்புத் தொழிலை, விவசாயப் பிரிவின்கீழ் வைத் திருக்கிறார்கள்" என்ற நியாயமான குறையை வெளியிட்டார்.

நான்கு மாதத்திற்கு முன்பு, தூத்துக் குடியைச் சேர்ந்த இராஜாராம் என்பவர் இறால் வளர்ப்புப் பண்ணை ஆரம்பித்திருக் கிறார் என்பதை அறிந்து அவரைச் சந்தித் தோம்.

"என்னுடைய உப்பளத்தில் செய்து வந்த உப்புத் தொழில் இலாபகரமாக இல்லாத தால், அந்நிலம் அப்படியே கிடந்தது. MPEDA — விலிருந்து வந்து பார்த்துவிட்டு, இறால் வளர்ப்புத் தொழிலை ஆரம்பிக்கலாம் என்றும், அதன் செலவு — இலாபம் பற்றிய குறிப்புக்களையும் தந்தார்கள். சரி... செய்து பார்ப்போமே என்று, பரிசோதனையாக முதலில் வெறும் ஒரு ஹெக்டேரில் குளம் அமைத்து, இறால் வளர்ப்பைத் தொடங்கி யிருக்கிறேன். இப்பண்ணையைக் கவனிப்ப தற்கு ஒரு காவலாள், ஒரு மேற்பார்வை யாளர், (எஸ். லட்சுமிநாராயணன்), மேலும் ஒரு இரசாயனப் பரிசோதகர் (சி. கலையரசன்) — ஆகியோரை நியமித்து, ஒரு சிறு ஆய்வுக் கூடத்தையும் உருவாக்கிக் கொடுத்துள்ளேன்! இதில் நான் வெற்றி கண்டால், காலியாகக் கிடக்கின்ற ஏனைய பகுதிகளிலும் இறால் வளர்ப்பை மேற் கொள்ளத் திட்டமிட்டுள்ளேன்" என்று கூறினார் ராஜாராம்.

மொத்தத்தில், இறால் வளர்ப்பில் அதிக இலாபம் இருப்பது, உள்ளங்கை நெல்லிக்கனி. அதே சமயம், நமது அரசு, குறைந்த விலையில் நிலமும், இறால் செயற்கை உணவும் கொடுப்பதோடு, மின் கட்டணத் தையும் விவசாயிகளுக்கு வழங்குவது போன்று சலுகைக் கட்டணத்தில் வழங்க முன்வந்தால்... எளியவர்கள் கூட இத் தொழிலை மேற்கொள்ளலாம்.

கட்டுரை, புகைப்படங்கள்:

**குளச்சல் இப்ராஹிம்**

# “சுவையுடன் வளர ராசிபலன் சொல்கிறது ஃபாரெக்ஸ்”

நீங்கள் ராசிபலனை நம்பினால், ரிஷபராசியில் பிறந்த உங்கள் குழந்தை இயற்கையாகவே ஆசைக்குரியதாக இருக்கும். சிறுவயதிலேயே அதற்கு அழகான பொருட்களென்றால் அலாதிப்பிரியம் இருக்கும். அதை அவசரப்படுத்தினால் எரிச்சலடையும். மெதுவாக நீங்கள் பேசித்தான் அதை வேலை வாங்க முடியும்.




ராசிபலனை நம்பினாலும், நம்பாவிட்டாலும், குழந்தையின் போஷாக்கு என்றால் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானது ஃபாரெக்ஸ்.

4-வது மாதம் முதல் உங்கள் குழந்தைக்குப் ‘‘பாலடங்கிய ஃபாரெக்ஸை’’ ஊட்டுங்கள். இது முழுமையான ஆடைப்பாலிலிருந்து தயாராவதால் குழந்தை நன்கு வளரத் தேவையான கால்ஷியம், தாது உப்புக்கள், புரதம், வைட்டமின்கள், கோதுமைத்தானியம் அனைத்தையும் உள்ளடக்கியது.

6-வது மாதம் முதல் ஃபாரெக்ஸ்-வெஜ் ஊட்டுங்கள். இது ருசியுடன் கூடிய ஊட்டச் சத்துக்களடங்கியது.







**சுவையுடன் வளரும் வழி**

GX/44/213 TML



# எழுகிறது உம் நூற்றாண்டுக் கட்டடம்!

**செ**ன்னையின் மையமான இடத்தில், ஒரு பூலோக சொர்க்கம் அமையவிருக்கிறது. அமைக்கப் போகிறவர்கள்: ஸ்பென்சர் நிறுவனத்தினர். பெயர்: 'ஸ்பென்சர் பிளாசா.'

இரண்டு வருடங்களுக்கு அப்புறம் சென்னைவாசிகள் யாரும் விடுமுறை நாளைக் கழிக்க, குழந்தைகளுடன், குடும்பத்துடன் எங்கே போவது என்று தலையைச் சொறிந்து கொண்டிருக்க வேண்டாம். நேராக ஸ்பென்சர் பிளாசாவுக்கு வந்து விட்டால் போதும்!

- குழந்தைகளுக்கு விளையாட்டு மையம்;
- சுற்றிலும் பச்சைப் பசேல் என்று பூங்காக்கள், மரங்கள்;
- *1000* கார்கள் நிறுத்த இட வசதி. மேலே, தளத்தில் கார்களை நிறுத்தலாம்!
- குழந்தைகளை விளையாட விட்டுவிட்டால், ஹாய்யாக ஷாப்பிங் செய்ய 'ஏர்கண்டிஷன்ட்' கடைகள்;
- ஏறுவதற்கும் இறங்குவதற்கும் அலுக்காதபடி எஸ்கலேடர்கள்;
- உள்ளுக்குள்ளேயே கண்ணாடிக் கூண்டு 'லிஃப்ட்'டுகள்!

'இது எல்லாம் அமெரிக்காவில் சாத்தியம்; ஜெர்மனியில், ஜப்பானில் சாத்தியம். இங்கே நடக்குமா?' என்று கேட்கலாம். அதையேதான் நாங்களும் ஸ்பென்சர் நிறுவன அதிபர் ஆர். வேணுகோபாலைப் பார்த்துக் கேட்டோம்.

''ஏன் முடியாது?'' என்றார் வேணுகோபால். 'இதுவோ சுமார் நூறு வருஷமான கட்டடம். அதிலும் சில வருடங்களுக்கு முன் நிகழ்ந்த விபத்தில் ஒரு பகுதி எரிந்து போய்விட்டது. அந்த நாளையக் கட்டடம். அதுவும் தொட்டாலே பொல பொல வென்று உதிர்ந்து விடுகிறது... எங்கள் கன்னிமாரா ஓட்டல் நிலத்தையும் சேர்த்து மொத்தம் பதினைந்து ஏக்கர் நிலம் இது. பத்து ஏக்கர் நிலம் ஒட்டுமொத்தமாக, சென்னையின் பிரதான பகுதியில் கிடைப்பதே அபூர்வம். எங்களிடம் வாகாக அப்படி அமைந்திருப்பது ஒரு சாதகமான விஷயம் இல்லையா?''



• மிகப் புராதனமான இந்தக் கட்டடத்தை இடித்துத் தள்ள எப்படி உங்களுக்கு மனசு வந்தது?

சென்னையின் மிக முக்கியமான 'லாண்ட் மார்க்' கட்டடம்தான். ஆனால் கட்டடத்தின் ஒவ்வொரு செங்கல்லும் அப்படியே உதிர்ந்து விடும் நிலையில் இருக்கும் போது பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? சொன்னால் நம்ப மாட்டீர்கள். இந்தப் பழைய கட்டடத்தை இடித்துத் தள்ள நாங்கள் எடுத்துக் கொண்டது மிகக் குறுகிய நேரம்தான்! இத்தனை அருமையான வியாபார கேந்திரத்தில் ஒரே ஒரு மாடியுள்ள கட்டடத்தை வைத்துக் கொண்டிருப்பது பொருளாதார ரீதியில் புத்திசாலித்தனமல்ல. அதனால்தான் இந்த முடிவுக்கு வந்து, மளமளவென்று வேலையைத் துவக்கினோம். தரையோடு சேர்த்து மூன்று தளங்கள். அதற்கும் மேலே அலுவலகங்களுக்கு என்று கட்டப் போகிறோம். முதல் மூன்று தளங்களில், ஒவ்வொரு தளமும் இரண்டு லட்சம் சதுர அடி கொண்ட 'ஷாப்பிங்' ஏரியா. முழுக்க முழுக்க ஏர்கண்டிஷன் செய்யப்படும். நான்கு லட்சம் சதுர அடி அலுவலகங்களுக்கு ஒதுக்கப்படும். ஸ்பென்சரின் சொந்த சூப்பர் மார்க்கெட்டுக்கே இரண்டு லட்சம் சதுர அடி தேவை!

பூங்காக்கள், மருத்துவ மையம், விருந்துபசார மண்டபங்கள், கலந்துரையாடல் கூடங்கள், பிஸினஸ் சென்டர்கள், சினிமா தியேட்டர், எல்லாம் இங்கே அமைக்கப்பட இருக்கின்றன.

• இத்தனைக்கும் மின்சாரம் தட்டுப்பாடு இல்லாமல் கிடைக்குமா?

கிடைக்க வேண்டும். போதாவிட்டால் ஜெனரேட்டர் உபயோகிக்க வேண்டியது தான்.

• எப்படி இந்த மாதிரி டிசைன் தேர்ந்தெடுத்தீர்கள்?

போட்டி வைத்தோம். இந்தியா முழுவதிலுமிருந்து முப்பது டிசைன்கள் வந்தன. அதிலிருந்து பத்தைத் தேர்ந்தெடுத்து, விவரமறிந்த நிபுணர் குழுவிடம் கொடுத்தோம். பிறகு ஒன்றே ஒன்றைத் தேர்ந்து எடுத்துக் கொடுத்தது குழு. தீப்பெட்டி மாளிகையாகவும் இருக்கக்கூடாது. மிக மிக நவீனமாகவும் இருக்க வேண்டும். அதேசமயம், இந்திய பாரம்பரியக் கலையழகும் கட்டடத்தில் வெளிப்படத் தெரிய வேண்டும் என்று தீர்மானித்தோம். 'மங்கள் நீர்த்' நிறுவனத்தினரின் வடிவமைப்பே திருப்தி அளித்தது. அவர்கள் இதுமாதிரிக் கட்டடங்கள் கட்டுவதில் அனுபவம் உள்ளவர்கள். ஆமதாபாதில் இவர்களது நவீனக் கட்டடங்கள் மிகப் பிரசித்தமானவை.

மொத்த வேலையையும் இரண்டாகப் பிரித்திருக்கிறோம். முதல் கட்டப் பணி துவங்கி விட்டது. இரண்டே வருஷங்களில் முதல் கட்டப் பணி முடிந்துவிடும். இரண்டாவது கட்டப் பணி முழுதும் முடியச் சுமார் ஐந்து முதல் ஏழு வருஷங்கள் ஆகலாம்.

• இதுவோ முக்கியமான வியாபார கேந்திரம். அதிக விலை கொடுத்து உங்கள் இடத்தை யார் வாங்குவார்கள்?

பூமி பூஜை நடந்த அன்றே அத்தனை இடங்களும் விற்றுப் போய் விட்டன! முதல் கட்ட வேலை முடிந்த உடனேயே இரண்டாவது கட்டப் பணி ஆரம்பித்து விடுவோம். எங்களிடம் நிதி வசதிப் பற்றாக்குறை எதுவுமில்லை. அதனால் தடங்கல் எதுவுமின்றி வேலை திட்டமிட்டபடி நடைபெறும் என்று நம்புகிறோம். மக்களிடம் 'ஸ்பென்சர்' என்ற பெயர் ஒரு நம்பிக்கையைத் தூண்டும் அளவுக்குப் பிரபலம் அடைந்த ஒன்று... இடங்கள் விற்றுப் போவது இருக்கட்டும். இந்தப் 'பிளாசா' பற்றிய தகவல்கள் அடங்கிய புத்தகத்துக்கு விலை வைத்திருந்தால் கூடக் காசு கொடுத்து வாங்கிப் போயிருப்பார்கள். அத்தனை இழுபறி. ஒரு புத்தகம் கூடக் கைவசம் இல்லை!

• ஏற்கெனவே, கொஞ்சம் கூடுதலாக விலையுள்ள பொருள் வாங்கினால் 'ஸ்பென்சர் விலை' என்று சொல்லுவார்கள். புதிய ஸ்பென்சர் பிளாசாவில் வியாபாரம் செய்பவர்கள் ஏகத்துக்குப் பொருள்களை விலையேற்றி விற்க மாட்டார்களா?



"உங்க ஆபீஸ்ல லஞ்சம் கொடுத்தால் தான் எதையும் சாதிக்க முடியுமாமே...?"

"ஆமாம். எப்படித் தெரிஞ்சுகிட்டீங்க?"

"லஞ்சம் கொடுத்துத்தான்...!"

— கடுவை—கோபால்சாமி.

'ஸ்பென்சர் விலை' என்று சொல்லுவது அதன் உயர்வைக் குறிக்கத்தான். அப்படி எந்தப் பொருளையும் ஒரு குறிப்பிட்ட விலைக்கு மேல் விற்க முடியாது. எல்லாவற்றின் மீதும் அதிகபட்ச விற்பனை விலை அச்சடித்து விற்கும் காலம் இது. மற்ற விற்பனை நிலையங்களை விட அப்படி நாங்கள் கூடுதலாக விற்றால், சரக்கு விலை போக வேண்டாமா? ஒட்டுமொத்தமாக நாங்கள் பெருமளவுக்கு ஒரே கூரையின் கீழ் விற்பது, உண்மையில் பொதுமக்களுக்குத்தான் லாபகரமானது.

எங்கள் மரச்சாமான்கள், ஃபர்னிச்சர்கள் எல்லாம் தனித்தன்மையுடன், அலங்கார — அழகுணர்ச்சி உள்ளவர்களைக் கவர்ந்து இழுக்கும் விதத்தில் தயாரிக்கப்படுகின்றன. ஆயுள் முழுக்க உழைக்கின்றன. அவற்றை விலை அதிகம் என்று ஒதுக்குபவர் வெகு குறைவு!

- கடைசியாக ஒரு கேள்வி, மிஸ்டர் வேணுகோபால். இத்தனை பெரிய திட்டத்தில் சாராய சாம்ராஜ்யப் பெரும்புள்ளி ஒருவர் சம்பந்தப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டோமே, உண்மையா?

'லிக்கர் மன்னர்' யாரும் அப்படியே லட்சக் கணக்கான சதுர அடிகளையும் வாங்கிவிடவில்லை. ஆனால் நீங்கள் குறிப்பிடும் நபரின் இரண்டு நிறுவனங்கள் இங்கே இடம் வாங்கியிருக்கின்றன என்பது உண்மை. மற்ற எத்தனையோ பேர்களைப் போலத்தான் அவர்களும் வாங்கியிருக்கிறார்கள் என்பது தவிர, அவர்களே எல்லாவற்றையும் வாங்கிவிட்டார்கள் என்று மட்டும் தயவு செய்து அர்த்தம் செய்து கொள்ளாதீர்கள்!

ஸ்பென்சர் பிளாசா' கட்டடம் கட்டும் போதே ஆயிரக்கணக்கான பேருக்குக் கட்டடப் பணியில் வேலை கிடைக்கும் என்பது வெளிப்படையாகத் தெரியும் உண்மை. கட்டி முடித்த பிறகு? எத்தனை பேருக்கு நேரடி வேலை வாய்ப்புக்கள்! எத்தனை வியாபார நிறுவனங்கள் பங்கெடுத்துக் கொண்டு மறைமுக வேலை வாய்ப்புக்கள் வழங்கப் போகின்றன! இப்போது ஸ்பென்சர் நிறுவனங்களின் ஊழியர்கள் சுமார் 2500 பேர் மட்டுமே. 'பிளாசா' உருவான பிறகு இந்த உல்லாசக் கேந்திரத்தில் எத்தனை ஆயிரம் பேர் வேலை பார்ப்பார்கள் என்பதை நினைத்து உற்சாகம் பொங்கியது. பழைய கட்டடம் மறைந்தால்தான் என்ன? புதியதில் எத்தனை பலன்கள் கிளைக்கும்? 'சில பாரம்பரியங்களை அழிக்கவே முடியாது' என்று, ஸ்பென்சரின் ஒரு பகுதி தீவிபத்தில் எரிந்து போனபோது, ஸ்பென்சரின் விளம்பரம் அறிவித்தது எத்தனை உண்மை!

—சாருகேசி



## அருள்வாக்கு

"ஆசார்யாள்" என்ற மாத்திரத்தில் லோகமெல்லாம் நினைத்துப் போற்றும் நம் பகவத்பாதாளுக்கு இருந்த குருபக்தி சொல்லி முடியாது. பத்ரிநாத்தில் அவர் தம்முடைய குருவான கோவிந்த பகவத்பாதரையும் பரமகுரு (குருவுக்குக் குரு)வான கௌடபாதரையும் ஸாக்ஷாத் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபமாகவே பார்த்து அப்போதுதான் தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் சொல்லி, அடிக்கு அடி அவர்களை நமஸ்காரம் பண்ணினார் என்று சொல்கிறதுண்டு. இவரே அந்த தக்ஷிணாமூர்த்தியின் அவதாரந்தான். குருவின் மஹிமையை ஆசார்யாள் ஓர் இடத்தில் சிலாகித்துச் சொல்லும் போது, "பித்தளையைக் கூடப் பொன்னாக்குகிற ஸ்பர்சவேதி மாதிரி குருவானவர் பித்தளை மனசுக்காரர்களையும் மாற்றித் தங்கமாக ஜ்வலிக்கச் செய்பவர் என்று சொன்னால்கூட குரு மஹிமையை உள்ளபடி சொன்னதாகாது. ஏனென்றால் ஸ்பர்சவேதியில் இருந்த பித்தளை தான் மட்டுமே ஸ்வர்ணமாக ஆகுமே தவிர மற்ற பித்தளை வஸ்துக்களை ஸ்வர்ணமயமாக்குகிற ஸ்பர்சவேதியாக மாறாது. ஆனால் குருவை ஆச்ரயித்த சிஷ்யனோ, தான் பூர்ணத்துவம் பெறுவதோடு மட்டுமின்றி, தானும் குருவாகி மற்றவர்களுக்குப் பூர்ணத்துவம் தருபவனாகி விடுகிறான்" என்று சொல்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.




ஊழலை நிரூபிக்கும் புது சாட்சியங்கள்


ஃபோஃபர்ஸில் ஊழல் இல்லவே இல்லே! அப்படித் தானே!
சங்கரானந்த் கமிட்டி


மூக்குலே வேர்க்குரு! உடனே கவனிக்கணும்! ஆபத்து!
எம்.ஜி.ஆர். சமூக நல திட்டங்கள்
மொதல்லே இந்த மகோதரம் கேஸைக் கவனியுங்க!
லோன் மேளா


லாரி விபத்தில் சிவாஜி கட்சி ஊழியர்கள் மரணம்!
ஹும்!.. என்னை விட்டுட்டு லாரியிலே ஏறிட்டார்!




# கல்கி

1988 மே 8
மலர் 46 இதழ் 41
விபவ சித்திரை 26




## நாகரிக அரசியல், ராஜீவின் ராஜினாமாவைக் கோருகிறது!

**ம**றைமலைநகர் காங்கிரஸ் மாநாடு புஸ்வாணமாகிப் போனது. 'எந்தக் கட்சியுடனும் கூட்டுச் சேராமல் தேர்தலைச் சந்திக்க வேண்டும்; தனித்துப் போராட வேண்டும்' என்று அனைவரும் பேசியதைத் தவிர, உருப்படியாக வேறு ஒன்றும் சாதிக்கப்படவில்லை. வழக்கமான 'ஏழைமையை ஒழிப்போம்' பல்லவியும், 'எதிர்க்கட்சிகளின் சதித்திட்டம்' என்ற பஜனை கீதமுமே ஒலித்தன. காங்கிரஸின் பலவீனங்கள் என்ன என்பது ஆராயப்படவில்லை; அதன் கொள்கைகளுக்கு ஒரு பாதை வகுக்கப்படவில்லை; அதன் செயல் திட்டங்கள் என்ன என்பது அலசப்படவில்லை; தாங்கள் பதவிக்கு வந்தால் தமிழகத்தை எவ்வாறு உயர்த்துவோம், வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற பிரச்னைகளை எவ்வாறு சமாளிப்போம், தேர்தலைச் சந்திக்க உபாயங்கள் என்ன என்பதொன்றும் பேசப்படவில்லை; கட்சித் தேர்தல்கள் நடத்துவது பற்றி யாரும் மூச்சு விடவும் இல்லை! காங்கிரஸ், உட்கட்சி ஜனநாயகத்தை வளர்த்தாலன்றி அதற்குச் சாமானிய மக்களுடன் தொடர்பு கொள்ள வாய்ப்பே ஏற்படாது. நாட்டின் ஜனநாயகத்தை இத்தகையவர்களிடம் ஒப்படைக்க மக்களுக்கும் நம்பிக்கை பிறக்காது.

**கா**ங்கிரஸ் மாநாடு பிசுபிசுத்துப் போனதற்கு மற்றொரு காரணம், ராஜீவ் காந்தி சென்னை வந்து சேர்ந்த அதே தினத்தில் பெரும் சத்தத்துடன் போஃபோர்ஸ் குண்டு வெடித்ததுதான்! காங்கிரஸ் மாநாட்டையொட்டியே நாடாளுமன்ற ஆய்வுக் கமிட்டி தலைவர் சங்கரானந்த், ராஜீவ் அரசுக்கு நற்சான்றிதழ் வழங்கத் தீர்மானித்துச் செயல்பட்டிருக்கிறார். ஆனால் ஹிந்து பத்திரிகை போட்ட குண்டு, ஆய்வுக் கமிட்டி அறிக்கையை அர்த்தமற்றதாக மட்டுமின்றி, கேலிக்குரியதாகவும் ஆக்கிவிட்டது!

'போஃபோர்ஸ் பேரத்தில் இடைத் தரகர்கள் யாரும் இருக்கக் கூடாது என்று நிபந்தனை விதித்திருக்கிறோம்; இடைத் தரகர்கள் யாரும் இல்லவும் இல்லை' என்று பிரதமர் நாடாளுமன்றத்தில் அழுத்தம் திருத்தமாகக் கூறினார். ஆனால் நாடாளுமன்றக் கமிட்டியே இடைத்தரகர் இருந்ததையும் அவர்களுக்குப் பணம் தரப்பட்டதையும் உறுதிப்படுத்தியிருக்கிறது. எனினும், இடைத் தரகர்களுக்குத் தரப்பட்ட கோடிக்கணக்கான ரூபாய்கள், கமிஷன் அல்ல என்றும், இடைத்தரகு இனி இல்லை என்பதால் கொடுக்கப்பட்ட நஷ்ட ஈடு என்றும் போஃபோர்ஸ் நிறுவனம் தந்த விளக்கத்தை நாடாளுமன்றக் குழு ஏற்றுக்கொண்டிருக்கிறது. லஞ்சத்துக்குப் புதிய பெயர் சூட்டி அழைப்பதை எதிர்க்கட்சிகளால் புறக்கணிக்கப்பட்ட நாடாளுமன்றக் குழு ஏற்கலாம்; ஆனால் மக்களை ஏமாற்ற முடியாது.

நாடாளுமன்றக் குழு அறிக்கையில் ஆலடி அருணா தமது மாற்றுக் கருத்தை இணைக்கப் போராடி வெற்றிபெற வேண்டியிருந்தது. நாடாளுமன்றக் குழுவும், அதன் தலைவரும் நடந்து கொண்ட விதத்தை அவர் விரிவாக விளக்கி, இந்த விசாரணையே ஒரு கண் துடைப்பு நாடகம்தான் என்பதை உறுதிப்படுத்தியிருக்கிறார்.

ஹிந்து பத்திரிகையில் வெளியாகியுள்ள வங்கி தஸ்தாவேஜுகளும் டெலெக்ஸ் செய்திகளும் போஃபோர்ஸுக்கும் ஹிந்துஜாவுக்கும் உள்ள தொடர்பைத் தெளிவாக்குகின்றன. 'ஹிந்துஜா சகோதரர்கள் ராஜீவின் அரசியல் நடவடிக்கைகளுக்கு ஏராள நிதி உதவி செய்கிறவர்கள்' என்று வெளிப்படையாகவே மேல்நாட்டுப் பத்திரிகைகள் எழுதியுள்ளன. போஃபோர்ஸ் நிறுவனம், பிட்கோ, மாரெஸ்கோ, ஸங்கம், ஸ்வென்ஸ்கா என்று எந்தப் பெயரில் அயல்நாட்டு வங்கிகளில் பணம் போட்டாலும் அவற்றின் பெரும் பகுதி கடைசியில் இந்தியர்களுக்கே வந்து சேரும் என்று நம்ப இடமிருக்கிறது. இந்தியாவுக்குப் பீரங்கிகளை விற்க, சம்பந்தமில்லாத வேறு அயல்நாட்டு நிறுவனங்களுக்கு போஃபோர்ஸ் நிறுவனம் பணம் தரவேண்டிய அவசியம் என்ன? இதைத்தான் ஆலடி அருணாவும் அடிக்கோடிட்டுக் காட்டுகிறார்.

ஆக மொத்தத்தில், 'இடைத்தரகர்களே இல்லை' என்று ராஜீவ் காந்தி நாடாளுமன்றத்தில் தந்த உறுதி மொழி, உண்மைக்குப் புறம்பானதாகிறது. இந்தச் சூழ்நிலையில் நாகரிக அரசியல் அவரது ராஜினாமாவைக் கோருகிறது.

---

*தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற*
*தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.*

வட்டமேஜை

# குடந்தை மக்கள் தூங்கவில்லை!

• 'கடலூருக்குப் போகாத கட்டு மரங்கள்' என்னும் கவர் ஸ்டோரி படித்தேன். இருபது வருடத்திற்கு முன் கடலில் கட்டு மரங்களைச் செலுத்தி வளமுடன் வாழ்ந்த மீனவர் குடும்பங்கள் இன்று எத்தனையோ நவீன வசதிகள் இருந்தும் ஏன் வேதனைக் கண்ணீர் வடிக்கின்றன என்பதன் உண்மையைப் புரிந்து கொண்டேன். அவர்களின் இந்தத் துயர வாழ்க்கைக்கு ஒரு விடிவு காலம் பிறக்க இக்கட்டுரையின் மூலம் வழி பிறந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

திருச்சி — 5. எம். காமராஜ்.

• விடிந்திருந்தும், விடியலை எதிர்நோக்கிக் காத்திருக்கும் அந்த மீனவரின் அட்டைப்படம், ஆயிரம் அர்த்தங்களை உள்ளடக்கியது போல் இருந்தது!

குத்தாலம். எஸ். ராஜா.

• 'தீர்ப்பெழுதும் நாள்'... என்ற கவிதை அருமை. இந்தக் கவிதையை ஒவ்வொரு வாக்குச் சாவடியின் வாசலிலும் கொண்டு போய் வைக்க முடிந்தால்....?

தஞ்சை. கவிஞர் சுகன்.

• 'நேர்மைக்கு ஒரு நெடுமாறன்' கட்டுரை படித்து என் போன்ற தொழிலாளர்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தனர்.

மதுரை —16. கே. பாலசுப்ரமணியன்.

• அலைபாயும் எண்ணங்களுக்குக் 'கடிவாளம்' போடுவதால், மனிதன் எப்படி உயர்கிறான். மனித நேயம் வெளிப்படுகிறது — என்று மேலாண்மைப் பொன்னுச்சாமி தமது அபார — எளிய — எழுத்து நடையால் சிறப்பாகக் கூறியுள்ளார். வாழ்த்துக்கள்!

சென்னிமலை. வி. சோபனு.

• ஒரு நிறுவனத்தின் முன்னேற்றமானது கனரக மெஷின்களால் மட்டும் ஏற்படுவதல்ல ஒவ்வொரு தொழிலாளியினுடைய இன்ப துன்பத்திலும் அடங்கியிருக்கிறது என்பதை நாசுக்காகச் சொன்ன தமிழினியனின் 'நெருக்கம்' சிறுகதை ஏ. ஒன்...!

கோவை — 16. கா. கு. வே. ரோகிணி.

• முதல் வாரம் 'தராசு பதில்கள்' 'கட்'; அடுத்து, 'வட்டமேஜை'யே 'அம்பேல்!' நீங்கள், 'தில்லி சிறப்பிதழ்' வெளியிடும் சாக்கில், வழக்கமான சிறப்பம்சங்களை இல்லாமல் செய்வது சரிதானா...?

கோவை. உமார்த்தி.

• 'தில்லி அரசாங்கத்தில் சில சூத்திரதாரிகள்...' கலையான கட்டுரை. அதிலும் மணி சங்கர் ஐயர், டி. என். சேஷன் ஆகியோரின் பேட்டி மிகவும் அருமை. வேறு எந்த பத்திரிகையிலும் வராத செய்திகள் அடங்கியிருந்தன.

தர்மபுரி — 2. வித்யா.

• 'டாக்டர்' அத்வானியின் ஆலோசனைகளை நிறைவேற்றினால் அப்புறம் ராஜீவுக்கு என்ன மதிப்பு? பஞ்சாப் கலவரத்தை அணையவிடாமல் பாதுகாப்பதில்தான் அரசுக்கு லாபம்! அதைச் சாக்காக்கி நாடு முழுமையிலும் எமர்ஜென்ஸி வலையை வீசலாமே!

சென்னை — 8. பொருசி.

• நாட்டில் படித்தவர்கள்தான் வேலையில்லாமல் கஷ்டப்படுகிறார்கள் என்றால், சுயமாகத் தொழில் செய்து சம்பாதிக்கக் கூடிய சின்னூர் கிராம மீனவர்களும் எளிதில் தீர்க்கக்கூடிய பிரச்னையினால் கடலுக்குச் சென்று மீன்பிடிக்க முடியாமல் தவிப்பதைப் பார்க்கும் போது மிகவும் பரிதாபகரமாக இருக்கிறது.

இலால்குடி. எம். இராஜேந்திரன்.

• கும்பகோணம் மகளிர் கல்லூரி விவகாரம் தொடர்பான தராசு பதில் படித்தேன். குடந்தை வாழ் மக்களைப் பற்றிய தராசின் கருத்து சரியல்ல. நடந்து விட்ட அக்கிரமத்தை வன்மையாகக் கண்டித்து நடவடிக்கை எடுக்கக் கோரிக் கடந்த மார்ச் முப்பது அன்று கும்பகோணம் நகர சபைத் தலைவர் எஸ். குமரசாமி அவர்களின் தலைமையில் நடந்த கண்டனப் பொதுக் கூட்டத்தில் சர்வ கட்சியினரும் ஆயிரக் கணக்கில் பொது மக்களும் பெருந்திரளாகக் கலந்து கொண்டனர். மேல்மட்ட அரசியல்வாதிகளின் தலையீடு இருந்ததால் ஆரம்பத்தில் எந்த நடவடிக்கையும் எடுக்காமல் இருந்த போலீஸ் கூட இந்தப் பொதுக் கூட்டத்திற்குப் பின்பே வழக்குப் பதிவு செய்தது. இப்போது குற்றவாளிகள் கைது செய்யப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டுள்ளார்கள். தவறு செய்தவர்கள் தண்டனை பெறும் வரை, குமரசாமியும் குடந்தை மக்களும் இந்தப் பிரச்னையை விடுவதாக இல்லை. பொறுத்திருந்து பாருங்கள்!

கும்பகோணம். எஸ். ரவி.

• 'விதியின் கொடுமை' என்பதைத் தவிர என் நிலைமையை விவரிக்க வேறு வார்த்தைகள் இல்லை. ஐ-ஐ-டி-யில் டாக்டர் பட்டம் பெற்று டன்லப் நிறுவனத்தில் ஆராய்ச்சி விஞ்ஞானியாகப் பணியாற்றி மாதம் ரூ.4000க்கு மேல் சம்பாதித்துக் கொண்டிருந்த என் கணவர், ஏழு ஆண்டுகளுக்கு முன் தமது 32வது வயதில் ஒருநாள் மோட்டார் சைக்கிள் விபத்துக்கு உள்ளாகிக் கிட்டத்தட்ட ஓராண்டு காலம் நல்ல நினைவின்றிக் கிடந்தார். பிரபல நரம்புச் சிகிச்சை நிபுணர்கள் அவருக்கு நினைவும் பேச்சும் திரும்பப் பாடுபட்டு வெற்றி கண்டுள்ளனர். ஆனால் அவரால் நடக்க முடியவில்லை. இந்நிலையில் அவருக்கு இடுப்பு மூட்டுக்களில் கோளாறுகள் ஏற்பட்டிருப்பது கண்டு பிடிக்கப்பட்டு, இருபுறமும் செயற்கை மூட்டுக்கள் பொருத்தினால் நன்றாக நடக்க முடியும் என்று டாக்டர் மோகன்தாஸ் கருத்துத் தெரிவித்திருக்கிறார். இதற்கு மருத்துவ, மற்றும் பராமரிப்புச் செலவுகள் கிட்டத்தட்ட ஒரு லட்சம் வரை ஆகும் என்று கருதப்படுகிறது. என் தகப்பனார் வயதானவர்; வருவாய் அதிகமில்லாதவர். கணவரின் வருமானமும் நின்று போனது. எனவே என்னிடம் கருணை கொண்டு நல்லிதயம் படைத்தவர்கள் எனக்கு உதவ வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

லதா ஸ்ரீதரன்,
78, டாக்டர் பெஸண்ட் சாலை,
சென்னை — 14.

எழுந்தது...வேர்க்குருவுக்கு
ஒரு புத்தம்புது எதிரி.
ஷவர் டு ஷவர்




# இனி, வெய்யிலும் கானலும் இனிய நண்பர்கள் உமக்கு.

எந்தப் பவுடரிலும் நீங்கள் கண்டிராத வன்மையோடு வேர்க்குருவை விரட்டுகிறது புதிய ஷவர் டு ஷவர். இதிலுள்ள சிறப்பான மருந்துத் திறன், அரிப்பு நமைச்சல்களை நொடியில் போக்கி ஆறுதலளிக்கிறது. அதே வேகத்தில், வேர்க்குரு பிரச்சினையையே தீர்க்கிறது விருக்கென. ஷவர் டு ஷவர் மூலமாக உங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் குன்றாத குளுமை, உலர்வான சுக வசதி, சௌகரியம்—நாள் முழுதும், கோடைகால முழுதும். தூவிக் கொள்வீர் இன்றே துளியளவு. உலாச் செல்வீர் வெளியே, குளிர்காய்வீர் சூரிய ஒளியின் சுகமான நட்பிலே.



உயர்ந்த
செயல்திறன்



துரித நிவாரணம்.



ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

LINTAS SSP 5 2416 TM

# இதர எல்லா ஹேர் டைகளையும் சேர்த்தாலும் அவற்றைவிட ஏராளமானமக்கள் உபயோகிப்பது கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர் டை

அவற்றிற்கான 3 சிறந்த காரணங்கள்




இரண்டு நேச்சுரல் சாயல்களில் கிடைக்கிறது:
ப்ளாக் மற்றும் டார்க் ப்ரவுன்

1 கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை கேசத்திற்கு இயல்பான வண்ணத்தையும், தோற்றத்தையும் தருகிறது. இதிலே ஒரு உள்ளிணைந்த கண்டிஷனர் உள்ளது: இது கேசத்தை மென்மையோடும் படிமானத்தோடும் வைத்துக்கொள்ள உதவுகிறது. உண்மையிலேயே, நீங்களே சொன்னால் ஒழிய ஒருவரும் அறிந்துகொள்ள முடியாது.

2 இதர ஹேர் டைகளைப் போல் அல்லாமல், கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை உபயோகிக்க எளிதானது, வசதியானது. ஆம், இது உங்கள் கேசத்தை ஷாம்பூ செய்வதுபோல் சுலபமானது.

3 கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டையின் தரத்தைப் பற்றி நீங்கள் உறுதிப்படுத்திக்கொள்ள முடியும். காரணம், இது உங்கள் கேசத்தை பாதுகாக்கும் வண்ணம் விசேடமாகத் தயாரிக்கப்பட்டது. முழுமையான பாதுகாப்பு— இதுவே, கோத்ரெஜின் உறுதியளிப்பு.

**கோத்ரெஜ்** ® வழங்கும் தானே-பரவும் பெர்மனென்ட் ஹேர் டை.





# எமர்ஜென்ஸியை எதிர்த்த மாவீரர்!

கடந்த பத்தாண்டு காலமாகச் சீரழிந்து போய்விட்ட தமிழக அரசு நிர்வாகத்தையும் நலிந்து போன தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சியையும் மீண்டும் மேம்படுத்த, எதிர்க்கட்சியினர் கூடச் சிறந்த நிர்வாகி என்று பாராட்டக் கூடிய மு. கருணாநிதிதான் தமிழகத்தின் முதல்வராக வரவேண்டும்.

''மாநிலத்தில் சுயாட்சி; மத்தியிலே கூட்டாட்சி'' என்ற கொள்கை அடிப்படையில் அறிஞர் அண்ணா தலைமையில் தி. மு. க., ஆட்சிக்கு வந்தது. அண்ணாவுக்குப் பிறகு முதல்வராக வந்த கருணாநிதி, அண்ணா வழியில் அயராது உழைத்து, பல்வேறு மக்கள் நல்வாழ்வுத் திட்டங்களை ஏற்படுத்தினார். விவசாயத் துறையில் பசுமைப் புரட்சியையும், தன்னிறைவையும் கண்டார். அனைத்துக் கிராமங்களுக்கும் மின்வசதி ஏற்படுத்தினார். குடிசை மாற்று வாரியங்களை உருவாக்கி ஏழை மக்களின் கண்ணீரைத் துடைத்தார். ஏழை எளிய மக்களுக்காகக் கண்ணொளி வழங்கும் திட்டத்தை ஏற்படுத்தினார்.

சேலம் உருக்காலையைக் கொண்டு வருவதற்கு அரும்பாடு பட்டார். ஓசூர், இராணிப்பேட்டை தொழிற்பேட்டைகள் உருவாவதற்குப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டார். மத்திய அரசின் கட்டுப்பாட்டில் உள்ள தொழிற்சாலைகளில் வேலை வாய்ப்புக்களில் தமிழ்நாட்டு மக்களுக்கு முன்னுரிமை தரவேண்டும் என்ற முறையை ஏற்படுத்தினார். சென்னை அண்ணா மேம்பாலம் உள்படப் போக்குவரத்துக்கு வசதியாக மிகப் பெரிய பாலங்கள் கட்டப்பட்டன. சென்னை நகரக் குடிநீர் வசதிக்காக, உலக வங்கியே இது நல்ல திட்டம் என்று ஏற்றுக்கொண்ட வீராணம் திட்டத்தை ஏற்படுத்தினார். அது அ. தி. மு. க. ஆட்சியில் காழ்ப்புணர்ச்சியினால் கைவிடப்பட்டது.

இந்தியாவின் ''இருண்ட காலம்'' என்று வர்ணிக்கப்படும் எமர்ஜென்ஸியை எதிர்த்து, இந்தியாவிலேயே முதன் முதலாகத் தீர்மானம் நிறைவேற்றி, ஜனநாயகத்தைப் பாதுகாத்து, தமிழ்நாட்டு மக்களை எமர்ஜென்ஸிக் கொடுமைகளிலிருந்து காப்பாற்றி, அதற்காகத் தம் ஆட்சியையும் இழந்து தியாகத் திருவுருவமாகக் காட்சியளித்தார். இதற்காகப் பெருந்தலைவர் காமராஜ் அவர்களால் பாராட்டப் பெற்றவர்.

இந்தியாவிலேயே முதன் முறையாக கவர்னர்களுக்குப் பதிலாக மாநில முதல்வர்கள் சுதந்திர தினத்தன்று தேசியக் கொடியை ஏற்றலாம் என்று மாநில உரிமையைப் பெற்றுத் தந்தார்.

இலங்கைத்தமிழர்களுக்காகத்தொடர்ந்து போராடி, அதற்காகத்தம்முடைய சட்டமன்ற உறுப்பினர் பதவியையும் இராஜினாமா செய்தார்.

எந்தப் பிரச்னையிலும் உடனுக்குடன் முடிவுகளை எடுக்கக் கூடிய ஒப்பற்ற தலைவராகக் கலைஞர் இருந்து கொண்டிருக்கிறார்.



எத்தனை தேர்தல்களில் வெற்றி வாய்ப்பை இழந்தாலும், தொண்டர்களை அரவணைத்து, கட்சியைக் கட்டுக் கோப்புடன் வைத்திருக்கும் மன உறுதியையும் மனத்தெளிவையும் பெற்றிருக்கிறார்.

அனைத்து தி. மு. க. நகராட்சி, பஞ்சாயத்து ஒன்றியம், மற்றும் பஞ்சாயத்துக்களில் கடந்த இரண்டு வருடங்களாக நேர்மையான நிர்வாகம் நடைபெறுவதற்கு உறுதுணையாக இருந்து கொண்டிருக்கிறார்.

நிர்வாகத் திறமையும், தன்னம்பிக்கையும் உடைய தமிழ் இனத் தலைவரான டாக்டர் கருணாநிதிதான் முதல்வராக வரவேண்டும்.

அ. பீர் முகமது, திருச்சி — 14.

## 4




ராம்பிரகாஷ் ஜீப்பில் செல்லும் போது சோமசேகரை அந்தக் கேள்வி கேட்க விரும்பவில்லை. சோமசேகருக்கு முழு விவரமும் தெரியுமோ இல்லையோ. இந்த வேளையில் எந்த மட்டில் செய்தியைத் தரலாம் என்பதைப் பற்றி அந்த போலீஸ் அதிகாரியே தீர்மானிக்கட்டும் என்று மௌனமாகவே வந்தார். கோபிதான் பரபரப்பாக இருந்தார்: ''சோமு என்ன ஆச்சுன்னு சொல்லிடு.''

''வாங்க பார்க்கலாம்''

''கெட்ட செய்தியா?''

''அவசரப்பட வேண்டாம்னு தோணுது'' என்றார் ராம்பிரகாஷ்

''அப்பா! எப்படித்தான் உன்னால இப்படித் திட மனசோட வர முடியுதோ, நானாயிருந்தா...''

''கோபி கொஞ்ச நேரம் சும்மா வரியா...?''

''ஜீப்புக்குள் ரேடியோ குரல் கொடுத்தது! ''கண்ட்ரோல் டு க்ரைம்ஸ்!'' —வெட்டப்பட்ட, உணர்ச்சியில்லாத குரல்.

சோமசேகர் மைக்கை எடுத்துக் கொண்டு ''கோ'' என்றார்.

''கபன் பார்க் பப்ளிக் லைப்ரரி அருகில் மண்டபத்துக்கு வரவும்.''

''ராம்பிரகாஷ் அதைக் கவனித்தாலும் அதைப் பற்றிச் சிந்திக்க மறுத்தார். அம்ருதாவை முதன் முதலில் அரக்கு கலர் புடைவையில் பார்த்தது ஞாபகம் வந்தது.

'பாடுவாங்களா?'

'பாட்டு பழக்கமில்லைங்க'

'ரொம்ப நல்லதாப் போச்சு, நான் கூட பாடமாட்டேன். டான்ஸ் ஏதாவது...?'

''ஸாரி. அது கூட ஏதும் சொல்லித் தரலை.''

பரவால்லைங்க''

'உங்களுக்கு ஏமாற்றமா?'

'இல்லைங்க. இந்தச் சந்தர்ப்பத்தில எனக்குக் கேக்றதுக்கு கேள்விகளே தோணலை. அதனால கேட்டு வெக்கணுமேன்னு பாடத் தெரியுமா ஆடத் தெரியுமான்னு கேட்டேன். எனக்குப் பாட்டு வேண்டாம், டான்ஸ் வேண்டாம். இதெல்லாம் கேக்கறது அற்பத்தனம். நான் என்ன பாட்டு பாடுவேன்? எனக்கு என்ன பிரத்தியேகமா டாலண்ட்டு இருக்குது? கேக்க அருகதையே இல்லைங்க!'

முதன் முதலாக அம்ரு, தலை குனிந்து கொண்டிருந்தவள், நிமிர்ந்து பார்த்தாள்



அவரை.

'இப்படி ஏதாவது குயுக்தியா சொன்னாத்தான் உங்க பொண்ணு தலை நிமிர்வாங்க போல!'

-மறுபடி தலை குனிந்த நிழலில் ஒரு சிரிப்பு.

விதான் சௌதாவின் பிரும்மாண்டமான கல் கட்டடம் மௌனமாக இருந்தது. இப்போது சாலையில் போக்குவரத்தும் செத்திருந்தது. மாருதி வேனில் இளைஞர்கள் இரைச்சலாகக் கடந்து சென்ற போது அவர்கள் விட்டுச் சென்ற பாட்டு சாலையில் படர்ந்தது. அட்டர கச்சேரி என்னும் செங்கல் வண்ணக் கட்டடத்துக்கு இடப்பக்கத்தில் கபன் பார்க்கில் ஜீப் நுழைந்த போது, டாக்டரின் இதயம் பதறத் துவங்கியது.

''கோபி! கோபி நான் என்ன பார்க்கப் போறேன்!''

''ராம் பதறாதே, ஒண்ணும் ஆகியிருக்காது.''

நூலகக் கட்டடத்தின் விளிம்பு, வானத்தில் பாதியை மறைக்க, அதன் முன் பக்கத்து ரோஜாத் தோட்டத்தில் ராத்திரி ரோஜாக்கள் காற்றில் ஆடிக் கொண்டிருக்க, வலதுபுறம் கல் மண்டபத்தின் எதிரே மற்றொரு போலீஸ் ஜீப் நின்று கொண்டிருந்தது. சோமசேகர் குதித்து இறங்கிப் புல்வெளியில் வேகமாக அந்த இலக்கை நோக்கிச் சென்றார். ராம்பிரகாஷ் கோபியின் கையைப் பிடித்து அழுத்தினார்.

''கோபி நான் வரலை, நான் பார்க்கலை!''

''பார்க்காதே. பார்க்க வேண்டாம். கொஞ்சம் நேரம்,கொஞ்சம் நேரம்'' என்று கோபி என்ன என்னவோ சொல்ல அவர் கையும் நடுங்குவதை ராம் கவனித்தார்.

டார்ச் வெளிச்சம் அந்த உருவத்தின் மேல் உலவ, அவள் கண்ணை முழங்கையால் மறைத்துக் கொண்டாள்.

அம்ரு!

ராம்பிரகாஷ் இயந்திரம் போல அந்த இடத்தை அணுகினார். தரையில் மண்ணில் அம்ரு கையை ஊன்றிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

அம்ரு! அம்ருதா!

"மிஸஸ் ராம்பிரகாஷ், நாங்க எல்லாம் வந்துட்டம், வந்துட்டம்."

"எழுந்திருங்க, ஸார் இவங்கதானே உங்க மனைவி?"

ராம்பிரகாஷ் அவளருகில் சென்று அவளை ஏந்திக் கொண்டு எழுப்பினார். அவள் அவரை அன்னியரைப் போலப் பார்த்தாள். கன்னத்தில் ரத்தமா குங்குமமா? தெரியவில்லை. உதடு நிச்சயமாக வீங்கியிருந்தது. மார்பில் போர்த்தியிருந்த கருநீல புடைவை நழுவ, அவள் உள்ளாடைகள் கிழிந்திருந்தன. உதட்டோரத்திலும் கழுத்திலும் காயங்கள் இன்னமும் கசிந்து கொண்டிருந்தன.

"அம்ரு! என் அம்ரும்மா! என்ன ஆச்சு? என்ன ஆச்சு? யாரு வந்து..."

அவள் எல்லோரையும் மிரண்டு பார்த்தாள் ஏதும் பேசவில்லை. "தண்ணி" என்றாள்.

"அம்ரு. இதபாரும்மா! நான் வந்துட்டவில்லே, நான்தான் அம்ரு: நான்தான். இத பாரு...

"தண்ணி" என்றாள்.

மற்ற ஜீப்பிலிருந்து காப்பி கொண்டு வந்திருந்தார்கள்.

"இதைக் கொடுங்க" என்றார் போலீஸ் அதிகாரி.

ராம்பிரகாஷ் அவளருகே குனிந்த போது, அவள் தலைமயிரில் பிடி வாசனை அடித்தது. "அம்ரு, நத்திங் டு வொர்ரி. நான் வந்துட்டனில்லே?"

"..."

"அம்ரு, அம்ரு, அம்ருதா..."

காப்பியை வாயில் ஊற்றினால் அது வழிந்தது. "செருப்பு, செருப்பு, என் செருப்பைக் காணோம்.

"தேடலாம்மா, இல்லே வேற செருப்பு வாங்கிடலாம்மா."

"நிறைய விலே!"

சோமசேகரை ராம்பிரகாஷ் பார்க்க, "அதிகம் பேசாதீங்க. கொஞ்சம் பிரமையில இருப்பாங்க. கிவ் ஹர் டைம். எழுந்திருங்க, யூ நீட் ஹெல்ப்!" என்றார் சோமசேகர்.

ராம்பிரகாஷ், "வாணுங்க நானே தூக்கறேன்" என்று கூறி, அம்ருதாவை எடுத்து ஜீப்பில் வைத்த போது கூடச் 'செருப்பு செருப்பு' என்றாள்.

"செருப்பு கெடைச்சுரும்மா அம்ரு!"

திரும்ப ஜீப்பில் செல்லும் போது, ஒரு முறை 'என்ன ஆச்சு' என்று மென்மையாகக் கேட்டதுக்கு "ஆச்சு, செருப்பு தொலைச்சாச்சு" என்றாள். அவளை இறுக அணைத்துக் கொண்டு, மார்பில் தடவிக் கொடுத்தார்.

"எல்லாம் சரியா போச்சு-புது செருப்பு வாங்கிரலாம்... ஸார் இப்ப எங்க போறோம்?"

"முதல்ல விக்டோரியா போயிரலாம். மெடிக்கல் அட்டென்ஷன் தேவைப்படுது



"உங்க கட்சி ரொம்பக் கட்டுப்பாடு உடைய கட்சியாமே?"

"ஆமாம்; லஞ்சம்னு கூட அதைத் தலைவர் மட்டும்தான் வாங்கலாம்!"

— கீழை. அ. கதிர்வேல்.

முதல்ல....

"என்ன ஸார் இது அக்கிரமம். ஜனங்க பஸ் பிடிச்சு ஏறக் கூடப் பத்திரமில்லாம என்ன ஸார் ஊரு, என்ன போலீஸு, என்ன அரசாங்கம்!"

கோபி மௌனமாகவே வந்தார். "டாக்டர் ராம்பிரகாஷ், முதல்ல இவங்களுடைய உடல் காயங்களைக் கவனிக்கலாம்."

"தூங்கறாங்களா?"

"மயக்கம்னு நெனைக்கிறேன்."

"இந்தப் பொய்த் தூக்கம்தானே வேணுங்கறது

நிசமாவே தூங்கறவனுக்கும். 'கர்ர்ர்' குறட்டை கேட்டிங்கல்ல?"

"எதுக்காக இப்படி போட்டு இம்சை பண்ணர அம்ரு: வந்துரு வந்துரு.

"டேஞ்சர்!"

"எல்லாம் போனாப் போறது. இப்பதான் எத்தனையோ வசதிங்கள்ளாம் இருக்குமே."

"டேஞ்சர் மாமா! கிட்ட வராதே மாமா. உங்க கண்ணைப் பார்த்தா இப்ப காமாக்கினி ஜொலிக்குது... உக்ரம் தெரியுது: வரலைப்பா வம்புப்பா!"

"மைகாட்! வாட் ஹாப்பண்ட்? சிஸ்டர் நிர்மலா! இங்க வாங்க; இவங்களை நேரா டாக்டர் ரத்னம் வார்டுக்குக் கூட்டிப் போங்க. ஸார் இது போலீஸ் கேஸா?"

"ஆமாம்மா.

"ஏயப்பா அந்த ரெஜிஸ்தரை எடுப்பா போலீஸ் அதிகாரிங்க வந்திருக்காங்கல்ல."

ஸ்ட்ரெச்சருடன் அவசர அவசரமாக வார்டு வரை தொடர்ந்தார். கோபி அவர் கையைப் பிடித்து அழுத்திக் கொண்டு வர, "ஏன் கோபி!" என்றார்.

திரையைப் போட்டு மறைத்து "நீங்கள்ளாம் கொஞ்சம் வெளிய இருக்கிங்களா?"

"சிஸ்டர், இவருதான் அந்தப் பொண்ணுடைய அஸ்பண்டு!"

"அடிச்சிட்டிங்களா!"

"இல்லே!"

அவள் பதிலுக்குக் காத்திராமல் "மொத்து மொத்துன்னு மொத்த வேண்டியது. அப்புறம் வந்து ஆஸ்பத்திரியில கரைய

வேண்டியது. ஒத்திப் போய்யா. அங்க பெஞ்சில இருங்க.

டாக்டர் ரத்னம் பெண் டாக்டர். கருப்பாக, குண்டாக, நகை ஏதும் இல்லாமல், மெத்து மெத்தென்ற கைகளை அலம்பிக் கொண்டே வெளியே வந்தாள்.

"ப்ரொபஸர் ராம்பிரகாஷ்ங்கறது?"

"நான்தான் டாக்டர்"

"வாங்க டிஸிபி வந்திருக்காரில்லே? அவரும் வரட்டும்."

வார்டின் ஓரத்து அறையில் நெருக்கமாக மேசை போட்டு, கையலம்ப பீங்கானும் ரத்தம் ரத்தமாக பாட்டில்களும் நீலக் காகிதத்தில் சுருட்டி வைக்கப்பட்ட பஞ்சும் அலமாரிக்குள் கண்ணாடித் தட்டில் ஆயுதங்களும்...

"எப்படி இருக்காங்க டாக்டர்?" என்றார் சோமசேகர்.

"ஷி இஸ் ஸ்லீப்பிங்"

"உடம்பு கண்டிஷன்?"

"மோசம்! பல இடங்கள்ள காயம்"

"என்ன மாதிரி காயம்?"

"நகம் கீறினது, அடிச்சது, கடிச்சது!"

"பலாத்காரம் ஆயிருக்குதா?"

"ஆமாம். என்ன ஸார் ஆச்சு?"

"பஸ் மிஸ் பண்ணியிருக்காங்க தனியா.."

"எங்க நடந்தது இது?"

"கபன் பார்க்கில."

"மைகாட் பங்களூர்ல எந்த இடமும் பத்திரமில்லையா? என்ன ஸார் இது!"

"என்னால எதும் சொல்லறதுக்கில்லை டாக்டர். ஒரு ஆளா அல்லது...?"

"இரண்டு பேராவது இருக்கணும். பேஷண்ட் உடல்வாகு ஸ்ட்ராங்கா இருக்குது. ரெண்டு பேராவது தேவைப்பட்டிருக்கும்."

ராம்பிரகாஷ் அப்படியே தரையில் உட்கார்ந்தார்.

"கண்ட்ரோல் யுவர் செல்ப் ப்ரொபஸர்!"

"ஏன்? ஏன்? கோபி, என்ன பாவம் செய்தா அவ?"

"ராம் அதெல்லாம் அப்புறம் பேசலாம்."

"டாக்டர் நான் அவளைப் பாக்கலாமா?"

"பாருங்க."

எழுந்து, சக்கரத்திரையைக் கடந்து, உயரமான படுக்கையில் படுத்திருந்த அம்ருவைப் பார்த்தார். கண்கள் மூடியிருந்தன. காயம் பட்ட இடத்தில எல்லாம் மருந்து போட்டு, பஞ்சு வைத்திருந்தது.

"அம்ரு!" லேசாகக் கூப்பிட்டார்.

"தூங்கறாங்க – ட்ராங்க்விலைஸர் கொடுத்திருக்கோம்."

"வலிக்குதா அம்ரு? அம்ரு, அம்ரு நான் உன்னைக் காப்பாத்தலை; அம்ரு நான் உன்னைத் தனியா விட்டுட்டுப் போயிட்டேன். அம்ரு... என்னை மன்னிப்பியா!" உடல் குளிரில் போலக் குலுங்க...

"ராம் என்ன இது!"

இரண்டு கைகளையும் கோத்துக் கொண்டு தம் நெற்றியின் மேல் மோதி அடித்துக் கொண்டார்.

"ராம்! ராம்! என்ன இது, நீ என்ன சிறு பிள்ளையா?"

சோமசேகர் அருகில் வந்து, "ப்ரொபஸர், நான் புறப்பட வேண்டியிருக்கிறது. இன்ஸ்பெக்டர் தர்மராஜை விட்டு விட்டுப் போகிறேன். நாளை காலை உங்களை வீட்டில் வந்து சந்திக்கிறேன்."

கோபி, "சோமு என்ன இப்படி விட்டுட்டுப் போறியே?" என்றார்.

"இன்னொரு கால் வந்திருக்கு கோபி; பாதியில விடலை நான். இந்தக் குற்றத்தைச் செஞ்சவனை அல்லது செஞ்சவங்களை ப்ரொபஸர் முன்னால கொண்டு வந்து நிறுத்திருவோம். கவலைப்படாதீங்க ஸார். ஐம் வெரி ஸாரி. போலீஸ் தரப்பில் என்ன சொன்னாலும் நீங்க சமாதானம் ஆகப் போறதில்லை. இந்த இழப்பு இந்த சேதம் உங்களுக்கு ரொம்ப பெரிசு. இது அநியாயம், அனாவசியம், தவிர்க்கக் கூடியது, தவிர்க்க வேண்டியது!... நான் வரேன்."

கோபி அவருடன் வந்தார். "சோமசேகர், என்ன ஆச்சு? தெளிவா சொல்ல முடியுமா?"

"தெளிவா தெரியக் கூடியது ஒன்றே ஒன்றுதான். ரேப்! யாரு எத்தனை பேரு இதெல்லாம்..."

"எப்ப தெரியும்?"

"நாளைக்கு அம்ருதாவை விசாரிச்சுத்தான் தெரிஞ்சுக்கணும்."

(தொடரும்)

---

"நீங்களும் உங்கள் பெற்றோரும் காட்டு வழியே போய்க் கொண்டிருக்கிறீர்கள் என வைத்துக் கொள்வோம்.



எதிரில் ஒரு சிங்கம் வருகிறது. அப்போது தாய், தந்தை இருவரில் முதலில் யாரைக் காப்பாற்றுவீர்கள்?" என்று அண்ணல் காந்தியிடம் ஒருமுறை கோகலே கேட்டார். அதற்குக் காந்திஜி சொன்னார்: "முதலில் நான் சிங்கத்தின் வாய்க்குள் புகுந்து விடுவேன். சிங்கம் என்னைக் கொன்று தின்பதற்குள் என் தாயும் தந்தையும் தப்பி ஓடிவிட முடியும். இவ்விதமாக அவர்கள் இருவரையுமே காப்பாற்றி விடுவேன்" என்றார். அவரல்லவா மகாத்மா!

— டி. எஸ். பாலு.

# "இந்திய அரசின் நோக்கம் எங்களுக்குப் புரியவில்லை!"

## —யாழ் மக்கள்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

**யா**ழ்ப்பாணத்தில் நான் இருந்தபோது ஒரு பாட்டில் பெட்ரோல் இருபத்தைந்து ரூபாய்க்கு விற்கப்பட்டது! பெட்ரோல் பங்குகளில் வேலை பார்த்து வந்த ஊழியர்கள் அத்தனை பேரும் வேலை நிறுத்தம் செய்ததுதான் விலை உயர்வுக்குக் காரணம் என்றார்கள். வேலை நிறுத்தத்துக்குக் காரணம் அவர்கள் விடுதலைப் புலிகளால் அச்சுறுத்தப்பட்டதுதான். ஆனால் சில தினங்களில் இந்த வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டு விட்டது.

நமது வீரர்கள் சிலரின் நடத்தையில் கொஞ்சம் முரட்டுத்தனம் இருப்பதும் உண்மைதான். நான் திரும்பி வந்து கொண்டிருந்த போது பீகாரி வீரர்கள் சிலர், லாரி டிரைவர்களிடம் ஹிந்தியில் மிரட்டுவது போல் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். ஒரு வீரன் தனது தொப்பியால் ஒரு லாரி டிரைவரை அடிக்கவும் செய்தான். உத்தரவு போட்டதும் லாரியை உடனே நிறுத்தவில்லை என்பதற்காக இவ்வளவு முரட்டுத்தனமாக நடந்து கொள்ள வேண்டுமா என்று தோன்றியது. தமிழ் வீரர்கள் அமைதிப்படையில் நிறையப் பேர் இருந்த போதிலும் சோதனைகள் நடக்கும் செக் போஸ்டுகளில் அவர்கள் இல்லாதது மொழிப் பிரச்னையை உருவாக்கி, வார்த்தைகள் தடிக்கக் காரணமாகிறது.

**தி**டீர்ச் சோதனைகள் மக்களைக் கஷ்டப்படுத்துவதும் உண்மை. வீடுகளில், சாலைகளில் கூட மக்களை நிற்க வைத்து ஆயுதங்கள் ஏதும் ஒளித்து வைத்திருக்கிறார்களா என்று சோதிக்கிறார்கள். இதனால் பல மணி நேரம் சாலையில் மக்கள் காத்து நிற்க நேர்வதும் உண்டு. இது ஒருவித வெறுப்பை உருவாக்கி வருகிறது. ஆனால் இவ்விஷயத்தில் தாங்கள் ஏதும் செய்வதற்கில்லை என்று அமைதிப்படையினர் கூறுகின்றனர்.

விடுதலைப் புலிகளைப் பிடிக்க, ஈ. பி. ஆர். எல். எஃப், டெலோ, ஈ. என். டி. எல். எஃப். போன்ற இதர கொரில்லாக்களின் உதவியை அமைதிப்படை நாடுவதும் மக்களுக்குப் பிடிக்கவில்லை. இதை இந்திய அமைதிப்படை அதிகாரிகள் மறுக்கவில்லை. 'இவர்கள் மட்டுமல்ல, விடுதலைப் புலிகளிலேயே பலர் மனம் மாறி எங்களுக்கு உதவுகின்றனர்' என்கின்றனர்.

இவை எல்லாவற்றையும் விட விசனிக்கத் தக்க ஒரு விஷயம், இலங்கைக்குப் புதிதாக வந்துள்ள நமது ராணுவ வீரர்களில் பலருக்கு எதற்காக, யாருடன் சண்டை போடுகிறோம் என்பதே தெரியவில்லை. யாழ்ப்பாணம் போகும் வழியில் கிளிநொச்சிக்குச் சற்று முன்னதாக அஸ்ஸாமைச் சேர்ந்த ஓர் இந்திய வீரர், 'விடுதலைப் புலிகளுக்கும் பாகிஸ்தானுக்கும் என்ன தொடர்பு?' என்று என்னைப் பேச்சினிடையே கேட்டார். மற்றொரு இடத்தில் கர்நாடகத்தைச் சேர்ந்த இன்னொரு வீரரும் ஏறத்தாழ இதே போல் கேட்ட போது நான் திடுக்கிட்டுப் போனேன்! தவிர நமது வீரர்கள் பலர் ஆங்காங்கே பரிதாபமான சூழ்நிலையில் காலத்தை ஓட்ட வேண்டியிருப்பதும் வருந்தத்தக்க விஷயம்தான். உதாரணமாக, உதயன் நாளிதழ் காரியாலயத்தில், பழைய கரி டப்பாக்களைக் கவிழ்த்து, அதனைக் கட்டிலாக எண்ணிச் சில இந்திய வீரர்கள் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன்.

நமது வீரர்களில் பலருக்கு எதற்காகப் போரிடுகிறோம் என்று தெரியவில்லை என்றால், யாழ்ப்பாண மக்களும் இந்திய அரசின் நிலை கண்டு குழப்பம் அடைந்திருக்கிறார்

இப்போது பயன்படுத்தப்படாத யாழ்ப்பாண ரயில் நிலையம் அருகே அமைதிப்படை வீரர்கள்.





''விலைவாசியைக் கட்டுப்படுத்தாம ஆட்சி நடத்தினது எவ்வளவு பெரிய இழப்புன்னு இப்பத்தான் தலைவர் உணர்ந்திருக்கார்!

''ஏன், அவருக்கு வெற்றி வாய்ப்பு கம்மியாயிட்டுதா?''

''அதில்லீங்க... ஐந்து, பத்துன்னு வாங்கிக்கிட்டு வோட்டுப் போட்ட குப்பத்து ஜனங்க, இப்ப நூறு, இருநூறுன்னு கேட்க ஆரம்பிச்சுட்டாங்களே...!''

— மணியன் தர்மலிங்கம்.

கள். ''விடுதலைப் புலிகளை இந்தியா எதிர்க்கிறதா ஆதரிக்கிறதா? விடுதலைப் புலிகளை ஒழிக்க எங்கள் ஆதரவைக் கேட்கும் இந்தியா, தில்லியில் அதனுடன் பேச்சு வார்த்தை நடத்தக் கதவுகளைத் திறந்து வைத்துக் கொண்டு காத்திருப்பதாகக் கூறுகிறதே. இதற்கு என்ன அர்த்தம்? இன்று நாங்கள் அமைதிப்படைக்கு உதவப் போக, இந்திய அரசு நாளை விடுதலைப் புலிகள் பதவிக்கு வர உதவுமானால், பின்னர் — நாளை மறுதினம், எங்களை யார் காப்பாற்றுவார்கள்?'' என்றெல்லாம் என்னைப் பல யாழ் மக்கள் கேட்டார்கள்.

இதன் காரணமாக மக்களுக்கு எதிர்காலம் பற்றிய நம்பிக்கை ஏற்படவில்லை. மனம் விட்டுப் பேசவும் அஞ்சுகிறார்கள். ஆனால் இந்தியாவுக்கு விரோதமாக யாரும் பேசவில்லை என்பதும் உண்மையே. எங்கு போனாலும் இந்தியன் என்ற முறையில் என்னை மிகவும் அன்பாக வரவேற்று உபசரித்தார்கள். அமைதிப்படையைக் குறை கூறி விமர்சித்தவர்கள் கூட அமைதிப்படை அங்கு தொடர்ந்து இருக்க வேண்டும்; அவசரப்பட்டுத் திரும்பக் கூடாது என்றனர்.

**அ**க்டோபரில் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்ற இந்திய அமைதிப்படை கனரக ஆயுதங்களை மிகவும் குறைவாகவே பயன்படுத்தியது. விமானத் தாக்குதலும் நடத்தவில்லை. இதனால் நகருக்குச் சேதம் மிகக் குறைவாகவே ஏற்பட்டுள்ளது. ஆனாலும் கூட, அந்தத் தாக்குதல் காரணமாகப் பாதிக்கப்பட்டவர்களிடையே மனக் கசப்பு இருந்து வருகிறது. யாழ்ப்பாணம் சேதமின்றித் தப்பினாலும் உரும்பிராயில் நமது ராணுவத் தாக்குதலால் பலத்த சேதங்கள் ஏற்பட்டிருப்பதைப் பார்த்தேன். அங்கு நான் ஒரு பிற்பகல் முழுவதும் தங்கி இருந்தேன்.

**இ**வையெல்லாம் ஒருபுறமிருந்தாலும் பிரபாகரனின் வலக்கரம் போல் விளங்கும் யோகியின் தங்கை, அமைதிப்படை பற்றிக் கூறியதை விட அதற்குப் பெரியதொரு பாராட்டு கிடைத்து விட முடியாது! மிதிலாவுக்கு இருபத்தைந்து வயது. அவருடைய மற்றொரு சகோதரர் குகன், ஸ்ரீலங்கா ராணுவத்துடன் மோதிய போது உயிரிழந்த ஒரு விடுதலைப்புலி.

''சுமார் இருபது முறையாவது ஸ்ரீலங்கா ராணுவத்தினர் எங்கள் வீட்டுக்குள் நுழைந்து சோதனையிட்டு விசாரித்திருப்பார்கள். இரவு பகல் என்று பார்க்காமல் எப்போது வேணுமானாலும் வருவார்கள். வயதான என் தகப்பனாரை மிரட்டுவார்கள். 'குகன் எங்கே ஒளிந்திருக்கிறான்?' என்று கேட்டு அதட்டுவார்கள்.

''இது பழைய கதை. இதன் பின்னர் விடுதலைப் புலிகள் யாழ்ப்பாணத்தை வசப்படுத்தினார்கள். குகனும் இறந்து போனான். இப்போது இந்திய ராணுவத்தினர் விடுதலைப் புலிகளைத் தேடுகிறார்கள். அவர்கள் விரும்பினால் **யோகியின்** தங்கை என்பதாலேயே என்னையும் என் கணவர் முதலானோரையும் இம்சிக்கலாம். ஆனால் அவர்கள் நல்லபடியாக நடந்து கொள்ளவே முயற்சி செய்கிறார்கள்!''

**எ**ன் அனுபவங்கள், பேச்சு வார்த்தைகள் எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்தால் கடைசியாக ஒரு விஷயம் தெளிவாக எனக்குப் புரிகிறது. அது, 'விடுதலைப் புலிகளின் ஒத்துழைப்பு இல்லாமல் யாழ்ப்பாணத்தில் அமைதி திரும்பாது' என்பது தான். சென்ற மாதம் (மார்ச்) விடுதலைப் புலிகள் எங்கேயோ கண்ணுக்குத் தெரியாமல் காடுகளில் மறைந்து இருந்து கொண்டே யாழ்ப்பாணத்தில் ஐந்து நாள் கதவடைப்பை வெற்றிகரமாக நடத்திக் காட்டினார்கள். அமைதிப்படை பாதுகாப்புத் தருவதாகக் கூறியும் எல்லாமே மூடப்பட்டு, வாழ்க்கையே ஸ்தம்பித்தது! கதவடைப்பு, இந்தியா விடுதலைப் புலிகளுடன் பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என்று கோருவதற்காகத்தான். இதிலிருந்து விடுதலைப் புலிகளுக்கு இந்த வட்டாரத்தில் உள்ள செல்வாக்கு புரியும். பயத்தினால் பல தமிழர்கள் விடுதலைப் புலிகளுடன் ஒத்துழைப்பதாகவும் இருக்கலாம். ஆனாலும் ஓர் அமைதிப்படை அதிகாரி கூறியது போல, ராணுவ ரீதியில் நாம் உயரே இருக்கிறோம்; 'விடுதலைப் புலிகளை நசுக்கவும் செய்கிறோம்; ஆனால், அரசியல் தீர்வு இல்லாமல் இங்கு அமைதி திரும்பாது; விடுதலைப் புலிகள் இல்லாமல் அரசியல் தீர்வு ஏற்படாது!

— எம். ஆர். நாராயண் சுவாமி.

ஏப்ரல் 7, 1988.

ஹா!!!

# புதிய ஸிபாகா டாப் டூத்பேஸ்ட்...
# ஒவ்வொரு சுவாசமும் புத்துணர்ச்சிமயம்.






முன்னைவிட
சிறந்த சுவை
அதிக நுரை

ஸிபாகா டாப்பில் நன்கு பரவும் விசேஷ பொருள் உண்டு. இது உடனடியாக வாய் முழுதும் பரவி, பற்சிதைவை உண்டாக்கும் நுண்கிருமிகளை அழித்து, வாய் துர்நாற்றத்தைத் தடுக்கிறது; உங்கள் வாயையும், பற்களையும் துப்புரவாக சுத்தம் செய்யும் போதே, உங்கள் சுவாசத்திற்கு முழுமையான புத்துணர்ச்சியையும் தருகிறது.

**சுவாசத்தின் புத்துணர்ச்சியை சோதித்துப் பாருங்கள் இப்படி.... ஹா ! ஸூப்பர் ஃப்ரெஷ்ஷ்... ஸிபாகா டூத்பேஸ்ட்.**



**முழுமையான புத்துணர்ச்சி**
**வாய்க்கு முழுப் பாதுகாப்பு**

## ஸிபாகா டாப்
டூத்பேஸ்ட்

இந்துஸ்தான் ஸிபா கைகியின் தரமிக்க தயாரிப்பு.

RCA/CT/141/88-TM-1

# அத்தியாயம் 8

## "ஐயோ! பிசாசு!"



ற்பக விருட்சம் பூங்குழலியின் மீது வர்ண மலர்களைச் சொரிந்தது. தேவலோகத்துக் கின்னரி வாத்தியங்கள் இன்ப கீதங்களைப் பொழிந்தன. ஏன்? பூங்குழலியின் மேனி நரம்புகளே யாழின் நரம்புகளாகித் தெய்வ கானம் இசைத்தன. இளவரசரின் கனிவு செறிந்த மொழிகள் அவளுக்கு அத்தகைய போதையை அளித்தன.

"இளவரசே! நான் தேவலோக கன்னிகை அல்ல; ஏழை ஓடக்காரப் பெண். தாங்கள் அருந்தியதும் தேவலோகத்து அமுதம் அல்ல; குழகர் கோயிலில் கிடைத்த பாலமுதம்!" என்றாள்.

"நீ தேவலோக கன்னிகையில்லையென்றால, நான் நம்பி விடுவேனா? வருணனின் திருப் புதல்வி அல்லவா நீ? சமுத்திர குமாரி! எத்தனை தடவை எனக்கு நீ உயிர் அளித்திருக்கிறாய்? உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்றார் இளவரசர்.

"ஐயா! இன்னும் ஒரு பகலும் ஒரு இரவும் தங்களுடன் இருக்க இந்த ஏழையை அனுமதிக்க வேண்டும்" என்றாள் பூங்குழலி.

"அது எப்படி முடியும்? உடனே நான் பழையாறைக்குப் புறப்பட வேண்டுமே?" என்றார் இளவரசர்.

"இல்லை; தங்களை நாகப்பட்டினத்துக்கு அழைத்துச் செல்லும்படி செய்தி வந்திருக்கிறது."

"யாரிடமிருந்து?"

"இளைய பிராட்டியிடமிருந்துதான்!"

"அது யார் அங்கே, இன்னொருவன்? வந்தியத்தேவனுடன் படகை இழுத்து வருகிறவன்?"

"என் அத்தான் சேந்தன் அமுதன். இளையபிராட்டி அவனிடந்தான் செய்தி அனுப்பியிருக்கிறார். தங்களை நாகைப்பட்டினத்தில் உள்ள சூடாமணி விஹாரத்திற்கு அழைத்துச் செல்லும்படி."

"ஆஹா! என் தமக்கையின் மனம் மாறி விட்டதா? எனக்கு முடிசூட்டும் ஆசை அகன்று விட்டதா? வெகு காலமாக எனக்குப் புத்த சங்கத்தில் சேர வேண்டும் என்ற ஆசை உண்டு. புத்த சங்கத்தில் சேர்ந்து பிக்ஷு ஆவேன். தூர தூர தேசங்களுக்கு யாத்திரை செய்வேன்! சாவகம் — கடாரம் — மாயிருடிங்கம் — மாபப்பாளம் — சீனம்! ஆஹா! என்னுடைய பாக்கியமே பாக்கியம்! பூங்குழலி! வா, போகலாம்!" என்று கூறி இளவரசர் எழுந்து நின்றார்.

அவருக்கு இன்னும் முழு நினைவு வரவில்லை. சுர வேகத்திலேயே பேசுகிறார் என்று பூங்குழலி சந்தேகித்தாள்.

அதே சமயத்தில் தூரத்தில் ஓலமிடும் குரல் ஒன்று கேட்டது.

இளவரசர் திடுக்கிட்டு நின்று, "பூங்குழலி! அது என்ன?" என்றார்.

"ஆந்தை கத்துகிறது, ஐயா!" என்றாள்.

"இல்லை! அது மனிதக் குரல்! ஏதோ பெரும் அபாயத்தில் சிக்கியவனின் அபயக் குரல்! அவனைக் காப்பாற்றி விட்டுப் போகலாம். புத்த சங்கத்தில் சேருவதற்கு முன்னால் ஒரு புண்ணிய காரியம் செய்யலாம்!" என்று இவ்விதம் கூறிவிட்டு இளவரசர் பாய்ந்து ஓட முயன்றார். அந்த முயற்சியில் திடீரென்று கீழே விழுந்தார். பூங்குழலி அவரைத் தாங்கிக் கொண்டாள்.

படகைக் கரை சேர்த்தவர்கள் இருவரும் ஓடி வந்தார்கள். மீண்டும் உணர்ச்சியை இழந்து விட்ட இளவரசரை அவர்கள் மெதுவாகத் தூக்கிக் கொண்டு போய்ப் படகில் பத்திரமாய்ச் சேர்த்துப் படுக்க வைத்தார்கள்.

அமரர் கல்கி

கால்வாயில் படகு போக ஆரம்பித்தது. இளவரசரைத் தவிர்த்த மற்ற மூவரும் இட நெருக்கடியுடன் அதில் உட்கார்ந்திருந்தார்கள்.

வந்தியத்தேவன், ''பூங்குழலி! நாலு பேரை இந்தப் படகு தாங்குவது கடினம். எப்படியும் நான் உங்களிடம் விடை பெற்றுக் கொள்ள வேண்டியவன். இங்கேயே இறங்கிக் கொள்கிறேன். இளவரசரைப் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பது உங்கள் பொறுப்பு. உங்களுக்கு அதிகம் நான் சொல்ல வேண்டியதில்லை!'' என்று சொன்னான்.

அவனுடைய குரல் தழதழத்தது. நிலாக் கிரணம் அவன் முகத்தில் விழுந்த போது கண்களில் முத்துத் துளிகள் ஒளி வீசித் திகழ்ந்தன.

''கோடிக்கரைக் காடு தாண்டிய பிறகு இறங்கிச் செல்லலாமே? என் குதிரையையும் அங்கேதான் நிறுத்தி வைத்திருக்கிறேன். அடையாளம் நினைவிருக்கிறதல்லவா?'' என்றான் சேந்தன் அமுதன்.

''வேண்டாம்; நான் இங்கேயே இறங்கிக் கொள்கிறேன். குழகர் கோயில் பிராகாரத்தில் சற்று நேரம் படுத்துத் தூங்கி விட்டுப் பொழுது விடிவதற்குள் எழுந்து புறப்படுகிறேன். இல்லாவிட்டால், நாளைக்குப் பிரயாணம் செய்ய முடியாது! வழியில் எவ்வளவு தடங்கல்களோ!'' என்றான் வந்தியத்தேவன்.

பூங்குழலி அத்தனை நேரமும் தன் மடியில் பத்திரப்படுத்தி வைத்திருந்த பொட்டணத்தை எடுத்து அவனிடம் கொடுத்தாள். ''இந்தா! குழகர் கோயில் பிரஸாதம். இதைச் சாப்பிட்டு விட்டுத் தூங்கு!'' என்றாள்.

''நீங்களும் ஒன்றும் சாப்பிடவில்லையே, உங்களுக்கு வேண்டாமா?''

''கோடிக்கரையிலிருந்து காத தூரம் கால்வாயில் போய் விட்டால் எத்தனையோ கிராமங்கள். நானாவது சேந்தனாவது போய் உணவு சம்பாதித்துக் கொண்டு வருவோம். உன் விஷயம் அப்படியல்ல. நீ ஒருவர் கண்ணிலும் படாமல் பழையாறை போய்ச் சேர வேண்டும் அல்லவா?''

''படகில் இளவரசர் இருக்கிறார் என்பதை நீங்களும் மறந்துவிடக் கூடாது.''

''இந்தப் படகில் இருப்பவர் இளவரசர் என்று யார் நம்புவார்கள்? அதைப் பற்றிக் கவலைப்படாதே! எங்கள் பொறுப்பு. இந்த ஓட்டைப் படகை யாரும் கவனிக்க மாட்டார்கள்.''

''சரி; அப்படியானால் இங்கேயே நான் இறங்கிக் கொள்கிறேன்.''

அச்சமயம் மறுபடியும் அந்த ஓலக் குரல் கேட்டது. ''ஆ! அது என்ன?'' என்று இளவரசர் கேட்டு விட்டு மறுபடியும் உணர்வை இழந்தார்.

பூங்குழலி எழுந்து நின்றாள்.

''முடியாது; என்னால் முடியாது. இளவரசருக்குத் தெரிந்தால் என்னை மன்னிக்க மாட்டார். இன்னும் கொஞ்ச நேரம் படகில் இரு. அந்த மந்திரவாதியைச் சேற்றிலிருந்து எடுத்து விட்டு விட்டு வருகிறேன். இங்கிருந்து அந்த இடம் கிட்டத்தான் இருக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டே படகிலிருந்து கால்வாயின் கரையில் குதித்தாள்.

''அப்படியானால் நானும் உன்னோடு வருகிறேன். அந்தப் பாதகனிடம் உன்னைத் தனியாக விட மாட்டேன்'' என்றான் சேந்தன் அமுதன்.

''இல்லை; அமுதா! நீ படகில் இரு! இளவரசரை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நான் பூங்குழலியுடன் போய் வருகிறேன். எனக்கும் அந்த மந்திரவாதியைப் பார்க்க வேண்டிய காரியம் இருக்கிறது!'' என்று சொல்லிவிட்டுப் பூங்குழலியைப் பின் தொடர்ந்து வேகமாக ஓடினான் வந்தியத்தேவன்.

பூங்குழலியின் மனக் கண் முன்னால் மந்திரவாதி மார்பளவு சேற்றில் புதைந்திருக்க, அவனைச் சுற்றி நரிகள் நின்று அவனைப் பிடுங்கித் தின்னப் பார்க்கும் பயங்கரக் காட்சி தோன்றிக் கொண்டிருந்தது. அதற்கிடையே இளவரசர் அவளைப் பார்த்து ''பெண்ணே! நீ கொலை பாதகி!'' என்று குற்றம்

சாட்டும் காட்சியும் தோன்றியது! இந்தக் காட்சிகள் அவளுடைய கால்களுக்கு மிக்க விரைவைக் கொடுத்தன. மந்திரவாதியை அமிழ்த்திய சேற்றுப் பள்ளத்தை அதி விரைவில் நெருங்கினாள். அங்கே மந்திரவாதியைக் காணாமல் பெரும் ஏமாற்றம் அடைந்தாள்.

பின்தொடர்ந்து வந்த வந்தியத்தேவன் அவள் பக்கம் நெருங்கியதும், அவள் தயங்கி நிற்பதின் காரணத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

"வேறு ஒரு சேற்றுப் பள்ளமாயிருக்கலாம். கோடிக்கரையில் எத்தனையோ பள்ளங்கள் உண்டு அல்லவா? நீ மறந்து போயிருப்பாய்!" என்றான்.

புதரில் ஒரு முனை கட்டியிருந்த சேந்தன் அமுதன் மேல்துண்டைப் பூங்குழலி சுட்டிக் காட்டினாள். பாவம்! அவளால் பேச முடியவில்லை.

"சேற்றிலே அமிழ்ந்திருப்பான் என்று நினைக்கிறாயா? இல்லை, இல்லை! ரவிதாஸனை அப்படியெல்லாம் கொன்று விட முடியுமா! அவனுக்கு நூறு உயிர் ஆயிற்றே! தப்பிப் போயிருப்பான்!" என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் புதரில் கட்டப்பட்டிருந்த துண்டை அவிழ்த்து



எடுத்துக் கொண்டான். பூங்குழலிக்கு ஆறுதலாக அவ்விதம் சொன்னானே தவிர, அவன் மனத்திற்குள் 'ரவிதாஸன் மாண்டுதான் போயிருப்பான். அவனுக்கு இந்தக் கோர மரணம் வேண்டியதுதான்!' என்ற எண்ணம் தோன்றியது.

இருவரும் அங்கே மேலும் நிற்பதில் பயனில்லை என்பதை ஒருங்கே உணர்ந்தார்கள். மீண்டும் கால்வாயை நோக்கி நடந்தார்கள்.

கால்வாயின் கரைகளை அங்கே இருபுறமும் மரங்கள் மறைத்துக் கொண்டிருந்தன. ஒரு மரக்கிளையைப் பிடித்துக் கொண்டு நின்று இரண்டு உருவங்கள் எட்டிப் பார்த்தது தெரிந்தது.

அவற்றில் ஒன்று ஆண் உருவம்; இன்னொன்று பெண் உருவம்.

"அதோ!" என்று பூங்குழலி சுட்டிக் காட்டினாள்.

"ஆமாம்; அவர்கள் யார் என்று தெரிகிறதா?"

"மந்திரவாதி ஒருவன்; இன்னொருத்தி என் அண்ணன் மனைவி. எனக்கு முன்னால் அவள் வந்து மந்திரவாதியை விடுவித்திருக்கிறாள்."

"நல்லதாய்ப் போயிற்று!"

"நல்லது ஒன்றுமில்லை. கால்வாயில் படகு வருவதை அவர்கள் உற்றுப் பார்க்கிறார்களே!"

அச்சமயம் இரண்டு உருவங்களில் ஒன்று திரும்பி இவர்கள் வரும் திசையைப் பார்த்தது. உடனே இரண்டு உருவங்களும் புதர்களுக்கு அடியில் மறைந்து விட்டன.

"ஐயோ! அவர்கள் நம்மையும் பார்த்து விட்டார்கள்!"

"பேசாமல் என்னுடன் வா! நான் ஒரு யுக்தி செய்கிறேன். நான் என்ன சொன்னாலும் ஆச்சரியப்படாதே! என்னை ஒட்டியே பேசு!" என்றான் வந்தியத்தேவன்.



ருவரும் மேற்கூறிய உருவங்கள் நின்ற இடத்துக்குச் சமீபமாகப் போனார்கள். அந்த இடத்தைக் கடந்து சிறிது அப்பால் சென்று கால்வாயின் ஓரமாக உட்கார்ந்து கொண்டார்கள்.

பின்னால் புதரில் மறைந்திருந்தவர்களுக்குத் தங்கள் பேச்சு நன்றாய்க் கேட்கும் என்று வந்தியத்தேவன் நிச்சயப்படுத்திக் கொண்டான்.

"பூங்குழலி! இதோ பார்! ஏன் கவலைப்படுகிறாய்! மந்திரவாதி செத்து ஒழிந்து போனான். போனதே க்ஷேமம்!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயோ! என்ன பயங்கரமான சாவு!" என்றாள் பூங்குழலி.

"கொலை செய்தது செய்துவிட்டு, இது என்ன பரிதாபம்?"

"ஐயோ! நானா கொலை செய்தேன்?"

"பின்னே அவன் சேற்றில் விழச் செய்தது யார்? நீதானே? திடீரென்று அப்புறம் உனக்குப் பச்சாதாபம் வந்து விட்டது. தப்புவிக்கலாம் என்று வந்தாய்! அதற்குள் அவனைச் சேறு விழுங்கி விட்டது. தப்புவிக்கத்தான் வந்தாயோ, அல்லது செத்துப் போய் விட்டானா என்று பார்ப்பதற்குத்தான் வந்தாயோ, யார் கண்டது?"

"உன்னை யார் என்னைத் தொடர்ந்து வரச் சொன்னது?"

"வந்ததினால்தானே நீ செய்த கொலையைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது? அடி கொலை பாதகி!"

"நானா கொலை பாதகி?"

"ஆம்; நீ கொலை பாதகிதான்! நான் மட்டும் யோக்கியன் என்று சொல்கிறேனா? அதுவும் இல்லை. நான் இளவரசரைக் கடலில் மூழ்கடித்துக் கொன்றேன். நீ மந்திரவாதியைச் சேற்றில் அமுக்கிக் கொன்றாய். அதற்கும் இதற்கும் சரியாய்ப் போய் விட்டது. நான் செய்த கொலையைப் பற்றி நீ வெளியில் சொல்லாமலிருந்தால், நீ செய்த கொலையைப் பற்றி நானும் யாரிடத்திலும் சொல்லவில்லை!"

"இளவரசரைக் கொன்றவன் நீதானா? சற்று முன் அவரைப் பார்க்கவேயில்லை என்று சொன்னாயே?"

"வேண்டுமென்றுதான் அப்படிச் சொன்னேன். இனிமேல் அப்படி உன்னிடம் பொய் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. நான் கூறியதை ஒப்புக் கொள்வாயா, மாட்டாயா?"

''மாட்டேன் என்று மறுத்தால்?''

''உடனே நந்தினி தேவியிடம் போய் நீ மந்திரவாதியைச் சேற்றில் அமுக்கிக் கொன்றதைக் கூறுவேன். நான் செய்த கொலைக்குச் சாட்சியம் இல்லை; உன் கொலைக்குச் சாட்சியம் உண்டு.....''

''நந்தினி என்னை என்ன செய்து விடுவாள்?''

''வேறொன்றும் செய்ய மாட்டாள். உன்னைப் பூமியில் கழுத்து வரையில் புதைத்து யானையின் காலினால் இடறும்படி செய்வாள்!''

''ஐயோ! என்ன பயங்கரம்!''

''வேண்டாம் என்றால், நான் கூறுகிறபடி செய்வதாக ஒத்துக் கொள்.''

''என்ன செய்ய வேண்டும்?''

''அதோ உன் அத்தான் கொண்டு வருகிறானே, அந்தப் படகில் ஏறிக் கொள். இரண்டு பேரும் நேரே இலங்கைக்குப் போய் விட வேண்டும். அங்கே போய் உன் இளவரசரை நினைத்து அழுது கொண்டிரு!''

''எதற்காக நான் இலங்கை போக வேண்டும்? இங்கேயே இருந்தால் உனக்கு என்ன?''

''ஆ! நீ போய் பழுவேட்டரையரிடம் என்னைப் பற்றிச் சொல்லிவிட்டால்! — அவருக்கு என்ன இருந்தாலும் இளவரசர் பேரில் அபிமானம் உண்டு. என்னைப் பழி வாங்கப் பார்ப்பார். எனக்கு இந்த உலகில் இன்னும் கொஞ்சம் வேலை இருக்கிறது.''

''அடபாவி! இளவரசரை ஏன் நீ கொன்றாய்? அதையாவது சொல்லி விடு!''

''சொன்னால் என்ன? நன்றாகச் சொல்லுகிறேன். இளவரசரும் அவருடைய தமக்கையும் சேர்ந்து ஆதித்த கரிகாலரின் இராஜ்யத்தைப் பறிப்பதற்குச் சதி செய்தார்கள். ஆதித்த கரிகாலர் என்னுடைய எஜமானர். அவருடைய விரோதி என்னுடைய விரோதி. அதனால்தான் இளவரசரைக் கொன்றேன் தெரிந்ததா?''

''இந்த மகாபாவத்துக்கு நீ தண்டனை அனுபவிப்பாய்.''

''அதைப் பற்றி நீ கவலைப்படாதே! நான் சொன்னபடி நீ செய்யப் போகிறாயா, இல்லையா?''

''செய்யா விட்டால் வேறுவழி



என்ன? அதோ படகு வருகிறது: போய் ஏறிக் கொள்கிறேன்.''

''இதோ பார்! நன்றாய்க் கேட்டுக் கொள். படகில் ஏறியதும் நேரே கடலை நோக்கிச் செல்ல வேண்டும். கோடிக்கரைப் பக்கம் திரும்பினாயோ, உன் கதி அதோகதிதான். இங்கேயே இருந்து நான் உங்கள் படகைப் பார்த்துக் கொண்டிருப்பேன். படகு கடலை அடைந்த பிறகுதான் இங்கிருந்து நகருவேன்.''

''சரி, சரி! இங்கேயே இரு! உன்னை நாறு நரிகள் பிடுங்கித் தின்னட்டும்!''

வந்தியத்தேவன் செய்த சமிக்ஞையைப் பார்த்துவிட்டுப் பூங்குழலி அங்கிருந்து விரைந்து போய்ப் படகில் ஏறிக் கொண்டாள்.

படகு மேலே சென்றது.

வந்தியத்தேவன் அவளிடம் கூறியபடி அங்கேயே உட்கார்ந்திருந்தான்.

அரை நாழிகை சென்றது.

படகு கால்வாயில் வெகு தூரம் வரை சென்று மறைந்தது.

திடீரென்று வந்தியத்தேவனுக்குப் பின்னால், ''ஹா ஹா ஹா'' என்ற ஒரு பயங்கரச் சிரிப்புக் கேட்டது.

வந்தியத்தேவன் திடுக்கிட்டவன் போல் பாசாங்கு செய்து, சட்டென்று எழுந்து நின்று பார்த்தான்.

மந்திரவாதி புதர்களுக்கு மத்தியில் எழுந்து நின்று பேய் சிரிப்பது போலப் பயங்கரமாகச் சிரித்தான்.

''ஐயோ! பிசாசு!'' என்று அலறிக் கொண்டு வந்தியத்தேவன் அங்கிருந்து ஓட்டம் பிடித்தான்.

# அத்தியாயம் 9
# ஓடத்தில் மூவர்

பொழுது புலர்ந்தது. கருநிற அழகியான இரவெனும் தேவி உலக நாயகனை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்து செல்ல நேர்ந்தது. நாயகனைத் தழுவியிருந்த அவளுடைய கரங்கள் இலேசாகக் கழன்று விழுந்தன. வாழ்க்கையிலேயே கடைசி முத்தம் கொடுப்பவளைப் போல் கொடுத்து விட்டு இரவெனும் தேவி இன்னமும் தயங்கி நின்றாள். "மாலையில் மறுபடியும் சந்திப்போம். நாலு ஜாம நேரந்தானே இந்தப் பிரிவு? சந்தோஷமாகப் போய் வா!" என்றது உலகம். இரவு தயங்கித் தயங்கி உலகத்தைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு சென்றது.

உள்ளத்திலே அன்பில்லாத கள்ளக் காதலனைப் போல் இரவு பிரிந்து சென்றதும் உலகம் மகிழ்ச்சியினால் சிலிர்த்தது. "ஆகா! விடுதலை!" என்று ஆயிரமாயிரம் பறவை இனங்கள் பாடிக் களித்தன. மரங்களிலும் செடிகளிலும் மொட்டுக்கள் வெடித்து மலர்ந்தன. எங்கிருந்தோ வண்டுகள் மந்தை மந்தையாக வந்து இதழ் விரிந்த மலர்களைச் சூழ்ந்து கொண்டு இன்னிசை பாடிக் களித்தன. விதவிதமான வர்ணச் சிறகுகள் உள்ள தட்டாரப் பூச்சிகள் நாலா பக்கங்களிலும் ஆனந்தக் கூத்தாடின.

கீழ் வானத்தில் பொன்னிறம் கண்டது. வானச் சுடர்கள் ஒவ்வொன்றாக ஒளிமங்கி மறைந்தன. இதுவரையில் வான வீதியில் பவனி வந்து கொண்டிருந்த பிறைச் சந்திரன் "நிற்கட்டுமா? போகட்டுமா?" என்று கேட்டுக் கொண்டிருந்தான்.

ஓடையில் படகு மெள்ள மெள்ளச் சென்று கொண்டிருந்தது. பட்சிகளின் கோஷ்டி கானத்தோடு துடுப்பு தண்ணீரைத் தள்ளும் சலசல சத்தமும் பூங்குழலியின் செவிகளில் விழுந்தது. திடுக்கிட்டுக் கண் விழித்தாள். ஒரு கிளையில் வெடித்த இரண்டு அழகிய நீல நிற மொட்டுக்கள் ஒருங்கே மலர்ந்தது போல் அவளுடைய கண்ணிமைகள் திறந்தன. எதிரே இளவரசரின் பொன்முகம் தோன்றியது. இன்னும் அவர் தூங்கிக் கொண்டிருந்தார். தூக்கந்தானா? அல்லது சுரவேகத்தில் இன்னமும் உணர்ச்சியற்றிருக்கிறாரா? தெரியவில்லை. எனினும், அவருடைய திருமுகம் எவ்வளவு பிரகாசமாயிருந்தது?

அப்பால் சேந்தன் அமுதன் துடுப்புத் தள்ளிக் கொண்டிருந்தான்.

"பூங்குழலி! ஏன் அதற்குள் விழித்துக் கொண்டாய்? இன்னும் சற்று நேரம் தூங்குவதுதானே?" என்றான்.

பூங்குழலி புன்னகை பூத்தாள். முகத்திலிருந்த இதழ்களிலே மட்டும் அவள் புன்னகை செய்யவில்லை. அவளுடைய திருமேனி முழுதும் குறுநகை பூத்தது.

காட்டிலே பிறந்து வளர்ந்து வாழ்ந்தவள் பூங்குழலி. ஆயினும் பட்சிகளின் கானமும், வண்டுகளின் கீதமும் இவ்வளவு இனிமையாக அவளுடைய செவிகளில் என்றைக்கும் தொனித்ததில்லை.

"அத்தான்! உதய ராகத்தில் ஒரு பாட்டுப் பாடு!" என்றாள் பூங்குழலி.

"நீ இருக்குமிடத்தில் நான் வாயைத் திறப்பேனா? நீதான் பாடு!" என்றான் சேந்தன் அமுதன்.

"இராத்திரி இருளடர்ந்த காட்டில் பாடினாயே?"

"காரிய நிமித்தமாகப் பாடினேன். இப்போது நீ பாடு!"

"எனக்கும் பாட வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. ஆனால் இளவரசருக்குத் தொந்தரவாயிருக்குமல்லவா?"

"எனக்குத் தொந்தரவு ஒன்றுமில்லை. இரண்டு பேரும் சேர்ந்து பாடுங்கள்!" என்றார் அருள்மொழி

வர்மர்.

பூங்குழலி வெட்கத்தினால் தலை குனிந்து கொண்டாள்.

"படகு எங்கே போகிறது?" என்று இளவரசர் கேட்டார்.

"நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்திற்கு!" என்றாள் பூங்குழலி.

"அப்படியானால், இராத்திரி நான் கண்டது கேட்டதெல்லாம் கனவல்லவா? உண்மைதானா?"

"ஆம், ஐயா! இதோ இவர்தான் தங்கள் தமக்கையாரிடமிருந்து செய்தி கொண்டு வந்தவர்."

"இளைய பிராட்டி கூறியதையெல்லாம் விவரமாகச் சொல்லு, அமுதா! என்னைப் புத்த சங்கத்தில் சேர்ந்து விடும்படிதானே என் தமக்கை சொல்லி அனுப்பினார்?"

இதற்கு என்ன விடை சொல்லுவதென்று அமுதன் தயங்கியபோது, குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது. பூங்குழலியும் சேந்தன் அமுதனும் நடுக்கிட்டார்கள்.

இளவரசரின் முகத்தில் மட்டும் ஒரு மாறுதலும் இல்லை.

"என் நண்பன் எங்கே? வாணர் குலத்து வீரன்?" என்று இளவரசர் கேட்டார். கேட்டு விட்டுக் கண்களை மூடிக் கொண்டார்.

சிறிது நேரத்துக்குள் குதிரை மீது வந்தியத்தேவன் தோன்றினான்.

படகு நின்றது.

வந்தியத்தேவனும் குதிரை மீதிருந்து இறங்கி வந்தான்.

"ஒன்றும் விசேஷமில்லை. நீங்கள் பத்திரமாயிருக்கிறீர்களா என்று பார்த்து விட்டுப் போக வந்தேன். இனி அபாயம் ஒன்றுமில்லை" என்றான் வந்தியத்தேவன்.

"மந்திரவாதி?" என்று பூங்குழலி கேட்டாள்.

"இந்தப் படகில் இளவரசர் இருக்கிறார் என்ற சந்தேகமே அவனுக்கில்லை. நான் கூறியதை அவன் அப்படியே நம்பி விட்டான்."

"அவனைப் பார்த்தாயா?"

"பார்த்தேன்; ஆனால் அவனுடைய பிசாசைப் பார்த்ததாகப் பயந்து பாசாங்கு செய்தேன்."

"உன்னைப் போல் பொய் சொல்லக் கூடியவனை நான் பார்த்ததேயில்லை."

"பொய் என்று சொல்லாதே! கற்பனா சக்தி என்று சொல்லு. இளவரசர் எப்படியிருக்கிறார்?"

"நடு நடுவே விழித்துக் கொண்டு இரண்டு வார்த்தை சொல்கிறார். அப்புறம் நினைவு இழந்து விடுகிறார்."

"இந்தச் சுரமே அப்படித்தான்."

"எத்தனை நாளைக்கு இருக்கும்?"

"சில சமயம் ஒரு மாதங்கூட இருக்கும். சூடாமணி விஹாரத்தில் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள். பிக்ஷுக்கள் வைத்தியம் செய்தால் இரண்டு வாரத்தில் குணப்படுத்தி விடுவார்கள். ஜாக்கிரதை! பூங்குழலி! உன்னை நம்பித்தான் இளவரசரை ஒப்படைத்து விட்டுப் போகிறேன். உன் அத்தான் எங்கேயாவது கோவில் கோபுரத்தைக் கண்டால் தேவாரம் பாடிக் கொண்டு சுவாமி தரிசனத்துக்குப் போய் விடுவான்!"

சேந்தன் அமுதன் "உன்னோடு பழகிய பிறகு அப்படியெல்லாம் செய்ய மாட்டேன். சிவ கைங்கரியம் செய்யும் ஆசை கூட எனக்குக் குறைந்து விட்டது!" என்றான்.

"என்னால் குறைந்து விட்டதா? அல்லது இந்தப் பெண்ணினாலா? உண்மையைச் சொல்!"

சேந்தன் அமுதன் அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் "குதிரையை நான் சொன்ன இடத்தில் கண்டு பிடித்தாயா?" என்று கேட்டான்.

"குதிரை என்னைக் கண்டுபிடித்தது. இது நான் உன்னிடம் தஞ்சையில் விட்டு வந்த குதிரை அல்லவா?"

"ஆமாம்."

"இருட்டில் இது அடர்ந்த காட்டுக்குள்ளே என்னைப் பார்த்து விட்டுக் கனைத்தது. அராபியர்களிடம் நான் அகப்பட்டுக் கொண்டதில் ஒரு விஷயம் தெரிந்து கொண்டேன், அமுதா! குதிரைகளை வெறுங்காலோடு ஓடச் செய்வது பாவம்! குளம்புக்கு அடியில் இரும்புக் கவசம் அடித்து ஓட்ட வேண்டும். முதன் முதலில் நான் பார்க்கும் கொல்லுப் பட்டறையில் இதன் குளம்புக்குக் கவசம் அடிக்கச் சொல்லப் போகிறேன். சரி, சரி! அதையெல்லாம் பற்றிப் பேச நேரமில்லை. மறுபடியும் உங்களையும் இள

# புதிய ஸெரிலாக் ஆரஞ்சு




## உங்கள் குழந்தைக்கு ஸெரிலாக் அனுகூலம் அளிக்க இன்னுமோர் வழி

இதோ உங்கள் குழந்தைக்கு இன்னுமோர் அனுகூலம்-புதிய ஸெரிலாக் ஆரஞ்சு. வளரும் ருசிக்கேற்ப உணவில் ஒரு மாறுதல் அளிப்பதோடு, அவனுக்கு ஆரஞ்சின் நன்மைகளையும் தருகிறது. நீங்கள் ஸெரிலாக் ஆரஞ்சு கொடுக்கும் பொழுது குழந்தைக்கு முழுமையான போஷாக்கு, நற்சுவை மற்றும் நொடிப் பொழுதில் தயாரிக்கும் வசதி ஆகிய எல்லா ஸெரிலாக் அனுகூலங்களும் தொடர்ந்து கிடைக்கின்றன. நான்கு மாதங்களிலிருந்து பால் உணவுடன் கூட ஸெரிலாக்-வீட் கொடுக்க ஆரம்பியுங்கள். ஆறு மாதங்களிலிருந்து ஸெரிலாக் ஆப்பிள்/புதிய ஸெரிலாக்-ஆரஞ்சு கொடுங்கள். மூன்று இனிய வழிகளில் ஸெரிலாக் அனுகூலத்தை உங்கள் குழந்தைக்கு அளியுங்கள்

*சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தவறு செய்து பின்பற்றுங்கள்.*






Nestlé

R K SWAMY/FSL/4974-TAM

வரசரையும் பார்ப்பேனோ, என்னமோ, தெரியாது. இளவரசர் மறுபடி விழித்தால் நான் பழையாறைக்குப் போகிறேன் என்று சொல்லுங்கள். அங்கிருந்து விரைவில் செய்தி அனுப்புவதாகவும் சொல்லுங்கள். அப்போதுதான் நிம்மதியாக இருப்பார்.''

வந்தியத்தேவன் குதிரையைத் திருப்பி விட்டுக் கொண்டு போனான். விரைவில் இவர்களுடைய பார்வையிலிருந்து அவன் மறைந்தான்.



ருபுறமும் தாழம் புதர்கள் அடர்ந்திருந்த ஓடைக்காலின் வழியாகப் படகு போய்க் கொண்டிருந்தது. பொன்னிறத் தாழம் பூக்களும், தந்த வர்ண வெண் தாழம் பூக்களும் இரு பக்கமும் செறிந்து கிடந்தன. அவற்றின் நறுமணம் போதையை உண்டாக்கிற்று. சில இடங்களில் ஓடைக் கரையில் புன்னை மரங்கள் வளர்ந்திருந்தன. சில இடங்களில் கடம்ப மரங்களும் இருந்தன. முத்து நிறப் புன்னை மலர்களும் குங்கும வர்ணக் கடம்ப மலர்களும் ஓடைக் கரைகளில் சொரிந்து கிடந்தன.

பூலோகத்திலிருந்து புண்ணிய சாலிகள் சொர்க்கத்துக்குப் போகும் பாதை ஒன்று இருந்தால், அது இப்படித்தான் இருக்கும் என்று பூங்குழலிக்குத் தோன்றியது.

இடையிடையே கிராமம் தென்பட்ட இடத்தில், சேந்தன் அமுதன் சென்று இளவரசருக்குப் பாலும் பூங்குழலிக்கு உணவும் வாங்கிக் கொண்டு வந்தான்.

இளவரசர் கண்விழித்தபோதெல்லாம் பூங்குழலி சற்று விலகி நின்றாள். நேருக்கு நேர் அவரைப் பார்க்க முடியாமல் அங்குமிங்கும் பார்த்தாள். அவர் உணர்விழந்திருந்த நேரங்களில் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். சேந்தனுடன் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டுமிருந்தாள். சில சமயம் இரண்டு பேரும் சேர்ந்து பாடிக் களித்தார்கள்.

சேந்தன் அமுதன் உணவு தேடிக் கிராமங்களுக்குச் சென்ற சமயங்களில் பூங்குழலி இளவரசரின் நெற்றியைத் தடவிக் கொடுத்தும் தலையைக் கோதி விட்டும் பணிவிடை செய்தாள். அப்போதெல்லாம் அவள் உள்ளம் பொங்கி, உடல் சிலிர்த்து, பரவச நிலையிலிருந்தாள்.

இம்மாதிரி அவள் எத்தனை எத்தனையோ பூர்வ ஜன்மங்களில் அவருக்குப் பணிவிடை செய்தது போன்ற உணர்வு தோன்றியது. உருவமில்லாத ஆயிரமாயிரம் நினைவுகள் இறகுகளைச் சடசடவென்று அடித்துக் கொண்டு அவளுடைய உள்ளத்தில் கும்பல் கும்பலாகப் புகுந்து வெளியேறிக் கொண்டிருந்தன.

ஒரு பகலும் ஓர் இரவும் அவர்கள் அந்த ஓடைக் கால் வழியாகப் படகில் சென்றார்கள். பூங்குழலியும் சேந்தனும் முறை போட்டுக் கொண்டு அவ்வப்போது சிறிது நேரம் கண்ணயர்ந்தார்கள். கண்ணயர்ந்த நேரத்திலும் உருவந் தெரியாத இன்பக் கனவுகள் பலவற்றைப் பூங்குழலி கண்டாள்.



று நாள் சூரியோதய நேரத்தில், உலகமே பொன்னிறமாக ஜொலித்த வேளையில், படகு நாகைப் பட்டினத்தை அடைந்தது. நாகைப்பட்டினத்தின் அருகில் அந்த ஓடையிலிருந்து ஒரு கிளை பிரிந்து சூடாமணி விஹாரத்திற்கே நேராகச் சென்றது. அந்தக் கிளை வழியில் படகைக் கொண்டு போனார்கள். புத்த விஹாரத்தின் பின்புறத்தில் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

அச்சமயம் அந்தப் புகழ் பெற்ற சூடாமணி விஹாரத்தில் ஏதோ குழப்பம் நேர்ந்து கொண்டிருந்ததாகத் தோன்றியது. விஹாரத்தின் வாசலில் ஜனக் கூட்டத்தின் இரைச்சல் கேட்டுக் கொண்டிருந்தது. பிக்ஷுக்கள் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

படகிலிருந்த மூவரும் கரையில் இறங்கினார்கள். சேந்தன் அமுதன், தான் விஹாரத்திற்குச் சென்று குழப்பத்தின் காரணம் என்னவென்று தெரிந்து வருவதாகச் சொல்லி விட்டுப் போனான்.

(தொடரும்)


SHRI RAM GROUP
ரெண்டு பேரும் ஆபீஸ் போய் சம்பாதிக்கிறாங்க!..ஹூம்.. என்ன பிரயோசனம்?..டி.வி.க்குத் தவணை, ஃப்ரிஜ்ஜுக்குத் தவணை.. தவணைப் பணம் கட்டவே சரியா இருக்கு!
வீட்டையும் கட்டிப் பார்!


நல்ல வேளை தவணைமுடிஞ்சுது! சரியாச் சொன்னீங்க. இந்தப் பொண்ணுே எம்.காம். முடிக்கப்போறா. ..அப்புறம் கல்யாணம். இவன் எப்படிச் சமாளிப்பான்?


ஏண்டி, ரமா. காலேஜ் விட்டுட்டு வீட்டுக்கு வர இனாலும் எட்டு மணியா?


மாலதி, என் பொண்ணும் இப்படித்தான் இருந்தா! வீண் வம்பு!.. அவ கல்யாணத்துக்கு வழி பண்ணுவோம்னு அவர், ராயல் பூட்டான், சிக்கிம்னு அது இதுன்னு லாட்டரி சீட்டா எக்கச்சக்கமா வாங்கிக் குவிச்சார்! லட்சம், கோடின்னு வந்து கொட்டும்னு..
லாட்டரி பணம் வந்ததா?


கோடியும் வல்லே, லட்சமும் வல்லே!.. வீட்டை வித்து பணம் பண்ணி வரன் பார்க்கும் போது.. அந்தப் பொண்ணுக்கு வயசு 30! என்ன பண்ணுவா? வாடகை வீட்லே குடி போனோம். நிம்மதியும் போச்சு!... பிளட் பிரஷரும் வந்துட்டுது!


ஜாக்ரதை! உன் சிநேகிதி லட்சுமி
சொன்னதை நானும் தான் கேட்டேன்.
நீ கவலைப் படாதே! ஒரு திட்டம்
கண்ணுலே படுது! கேட்டுக்கோ.
அவன் கிட்ட சொல்லி
வழிக்குக் கொண்டு வா!


என்னங்க, என் ஃப்ரண்டு லட்சுமி
பொண்ணோட கதை நம்ம வீட்லே
யும் நடக்கப் படாது. நம்ம நமா
வுக்கு மூணு வருஷத்துலே நிச்
சயம் கல்யாணம்!.. இது தான்
திட்டம்!


மாலதி, உன் சாமர்த்தியம் யாருக்கு
வரும்? ஜாம் ஜாம்னு அமர்க்களமா
கல்யாணம்! பொண்ணுக்குச் சீர் வரிசை
யும் ஜமாய்ச்சுட்டே!
என்ன மாயம்
பண்ணினே?




GROUP COMPANIES
MADRAS
மாயமும் இல்லை! மந்திரமும் இல்லை!
எல்லாம் ஸ்ரீராம் குரூப் தந்த
'MATCHLESS MATCHING'
திட்டம் தான்! மாசம் 1000 ரூபா
வீதம் 36 மாசம் கட்டி முடிச்சதும்
45 ஆயிரம் ரூபா வந்தது! அது மாத்
திரமா?... வேணும்னு மேலும்
45 ஆயிரம் கடனுதவியும் தராங்க!
ஆக 90,000 ரூபா போதாதா? அவ
ங்க கடனை 60 மாதத் தவணையில்
ஈஸியா அடைச்சுடலாம்) மாதா
மாதம் 1275 ரூபா கட்டினா போதும்!
"ஆமா, திவ்யா! நீயும் உன் வீட்
டைக் கட்ட உடனே இந்தத்
திட்டத்துலே சேர்ந்திடேன்!"




அருண் கையில் சூட்கேசுடன் சேலம் பஸ் நிலையத்தில் இறங்கினான். கூலி ஒருவர் எதிரில் வந்து நின்று உரிமையுடன் கேட்டார்:

''சார், சூட்கேசைக் கொடுங்க!''

கொடுத்தான்.

''ஆட்டோவா, சைக்கிள் ரிக்ஷாவா, குதிரை வண்டியா?''

''ஆத்தூர்.''

''ஆத்தூர்?!'' — நம்பிக்கை வராதவன் போல ஒரு பார்வை பார்த்து விட்டு மீண்டும் ஒருமுறை ''ஆத்தூர்?'' என்றான்.

''ஏன், அந்த மாதிரி ஊரே தமிழ்நாட்டிலே இல்லையா?''

''இருக்கு. அதுவும் மூணு ஆத்தூர் இருக்கு!''

''பின்னே?''

''நீங்க எங்கிருந்து வர்றீங்க?''

''சென்னை.''

# நீங்காத இருள்...

அ. தெய்வசிகாமணி



''என்ன சார் இது.. இந்த பஸ் ஆத்தூர் வழியாத்தானே சார் வருது.''

''ம்...?'' — அருணின் புருவம் மேலுயர்ந்து கண்கள் அகல விரிந்தன.

''விழுப்புரம், உளுந்தூர்ப்பேட்டை, கள்ளக்குறிச்சி, ஆத்தூர் வழியாத்தான் வருது!''

''மை காட்!''

''அஞ்சும் அஞ்சும் பத்து ரூபாய் நஷ்டம். இரண்டு மணி நேரம் வேஸ்ட். போகட்டும் விடுங்க. அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு பஸ் இருக்கு.'' — கூலி சூட்கேசுடன் முன்னால் நடந்தார்.

இந்த 'ரூட்'டைப் பற்றி இளங்கோ அருணிடம் சொல்லவில்லை! சூரமங்களம் ஜங்ஷனிலிருந்து சேலம்; சேலத்திலிருந்து ஆத்தூர்; ஆத்தூரிலிருந்து அம்மம்பாளையம், என்று மட்டுமே சொல்லியிருந்தான். பஸ்ஸில் வேறு அருண் நன்றாகத் தூங்கி விட்டான். இல்லையெனில் ஆத்தூரில் ஒருவேளை இறங்கியிருக்கக் கூடும்!

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு ஆத்தூரில் பஸ் நின்றபொழுது புரோக்கர் ஒருவர் உரத்த குரலில் 'முல்லைவாடி, துலுக்கனூர், கல்லாநத்தம், அம்மம்பாளையம், காட்டுக் கோட்டை, மணிவிழுந்தான்' என்று ஒரு வகை ராகத்துடன் திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டிருந்தார்.

அருண் அந்த பஸ்ஸிற்கு மாறினான்.

பஸ் டவுன் லிமிட்டைத் தாண்டி, ஒரு பாலத்தைக் கடந்து ஓடிக் கொண்டிருந்த பொழுது—அருண் தன் தகப்பனார் அடிக்கடி பிரயோகிக்கும் ஒரு வார்த்தையை நினைவு கூர்ந்தான்:

'பாடாவதி'. சுத்த பாடாவதி சாலையாகத்தான் அது இருந்தது. டிரைவர் இரண்டாவது 'கியரி'லிருந்து மூன்றுக்கும், மூன்றிலிருந்து இரண்டுக்குமாகப் போய் வந்து கொண்டிருந்தார். டாப் 'கியர்' பற்றி நினைத்துக் கூடப் பார்க்க வேண்டியதில்லை.

''அம்மம்பாளையம் எல்லாம் சீக்கிரம் இறங்குங்க'' — கண்டக்டர் விரலால் விசில் அடித்தார்.

அருண் சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு டீக்கடை தெரிந்தது. சீதோஷ்ண நிலையில் ஒரு மாற்றமும் தெரிந்தது. ஒரு புயலுக்கான முன் அறிவிப்பாய்ப் பயங்கர ஓசை கேட்டது.

''அய்யா, இந்த ஊர்லே இளங்கோவன்...''

''ஆமா. என் சித்தப்பன் பேரன்தான்... எங்க பிள்ளைதான். நாக்பூரில் பேங்க் உத்தியோகம் பார்க்கிறான்... நீங்க உள்ளே வந்துடுங்க! பேய்க் காத்து அடிக்குது!''

''நானும் அவர்கூடத்தான் வேலை செய்யறேன்!''

காற்றின் தீவிரம் அதிகமானது. 'உய்' என்கிற சப்தம். ஒருவர் பேச்சு மற்றவருக்குக் கேட்கவில்லை. தொலைவில் தெரிந்த மரங்கள் — குறிப்பாகத் தென்னை மரங்கள் தலைவிரி கோலமாய் ஆடின. சுவரிலிருந்து காலண்டர் பறந்து வந்து அருணின் மேல் விழுந்தது. கடைக்காரர் பாய்லர் விழுந்து விடாமல் பிடித்துக் கொண்டிருந்தார்.

பதினைந்து நிமிடத்திற்கும் மேலாகச் சீற்றத்துடன் ஒரு வழியாக அடித்து காற்று ஓய்ந்தது. தெருவெங்கும் தென்னை ஓலைகளும், வைக்கோல் சிதறல்களுமாக ஒரே அலங்கோலமாய்க் காட்சியளித்தது.

''அதோ, அந்தக் கோவில் தெரியுதுங்



''என்னங்க! எங்க அம்மா, ஊருக்கு என்னைக்குப் போனாங்க. உங்களுக்கு ஞாபகம் இருக்கா?''

''இல்லாம என்ன? சனிப் பெயர்ச்சி அன்னைக்குத்தான் ரயில் ஏறினாங்க...''

[redacted]

களா?

''ஆமாம்... தெரியுது!''

''அதிலிருந்து நேர் கிழக்கே ஒரு வண்டித் தடம் போகுது. அரை கிலோ மீட்டர் தூரம்தான் இருக்கும். பெரிசா ஓர் ஆலமரம் தெரியும். அங்கதான் இளங்கோ வீடு. ஆலமரத்துக் காடுன்னே அதுக்குப் பேரு. இளங்கோ நல்லா இருக்கானா?''

''சௌக்கியமா இருக்கான். நான் இருட்டறதுக்குள்ளே திரும்பிட முடியுங்களா?''

''நீங்க அங்கே தங்கப் போறதில்லையா?''

''இல்லே. நான் உடனே திரும்பியாகணும்!''

''இளங்கோவனுக்கு ஏதாவது...?'' — தயக்கத்துடன் கேட்டார்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. நாங்க இரண்டு பேரும் வர்றதா இருந்தோம். அவனுக்கு லீவு கிடைக்கலே. அதான் சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்!''

''அப்போ சீக்கிரம் புறப்படுங்க!''

''இந்த சூட்கேசை இங்கே வச்சுட்டுப் போறேனே?''

''தாராளமா... கொடுங்க!''

அருண் வண்டிப் பாதையில் நடந்தான். அது அவனுக்குப் புதிய அனுபவமாக இருந்தது. இரண்டு பக்கமும் வெற்றிலைத் தோட்டங்கள், பாக்குத் தோப்புகள், வாழைத் தோப்புகளாக காட்சியளித்தன. வழியில் அவனுடன் ஒருவர் சேர்ந்து கொண்டார்.

சற்றுத் தொலைவில் கிட்டத்தட்ட அடையாறு ஆலமரத்தில் சரி பாதிக்கு ஓர் ஆலமரம் தெரிந்தது. பேசிக் கொண்டே நடந்து கொண்டிருந்த இருவரும் ஒரே சமயத்தில் அதிர்ச்சியுற்று, நான்கடி பின்வாங்கினார்கள்.

மின் கம்பி ஒன்று அறுந்து அந்த வண்டிப் பாதையில் குறுக்கு வாட்டத்தில் கிடந்தது. அதுவும் ஹைச். டி லைன்.

சீற்றத்துடன் படமெடுத்துக் கொத்த வந்த நாகத்தைக் கண்டது போல இருவரும் நடுங்கிப் போய் விட்டார்கள். அதிர்ச்சி, பயத்திலிருந்து மீளவே சிறிது அவகாசம் தேவைபட்டது.

''இப்போ அடித்த புயல் காற்றிலேதான் இந்தக் கம்பி விழுந்திருக்குது. அஞ்சு மணிக்கு நான் இது வழியா வந்த போது எதுவும் இல்லே. சரி, தாண்டிக் குதித்துப் போயிடுவோம். இப்போதைக்கு இதை யார் சரி பண்ணப் போறாங்க!''

தாண்டினார்கள்.

''நீங்க ஆறுமுகத்துக்குச் சொந்தமா?''

''இல்லே... அவரோட மகன் இளங்கோ என் கூட நாக்பூர்லே வேலை செய்யறார்!''

''நல்லது. போய்ட்டு வாங்க. அவரிடம் இங்கே கம்பி விழுந்து கிடக்குதுன்னு மறக்காம சொல்லுங்க!''

''கண்டிப்பாச் சொல்றேன்.''

அடர்த்தியான வெள்ளை மீசையுடன் கறுப்பாய், ஒல்லியாய், வாசலில் ஒருவர் கட்டில் போட்டு அமர்ந்திருந்தார். இளங்கோவின் அப்பாவாகத்தான் இருக்க வேண்டும்.

''வாங்க!'' — இரு கைகளையும் கூப்பி வரவேற்றார்.

''வணக்கம்!''

''வணக்கம்! உங்களுக்கு யார் வேணும்?''

''நான் நாக்பூரிலிருந்து வரேன்...''

''அடடே! அருண்...!'' — வெளியில் குரல் கேட்டு இளங்கோவின் அம்மாவும் தங்கையும் ஆர்வமாய் வீட்டுக்குள் இருந்து வெளியில் வந்தார்கள்.

''வாங்க தம்பி!'' — இளங்கோவின் அம்மா.

''வாங்கண்ணா!'' இளங்கோவின் தங்கை.

''இளங்கோ லீவில் வர்றபோதெல்லாம் உன்னைப் பற்றிச் சொல்லுவான்!'' என்றார் ஆறுமுகம்.

''லெட்டர்லே கூட அண்ணன் உங்களைக் குறிப்பிட்டு எழுதியிருக்கு!'' என்றாள் கமலம்.

''உன் தங்கைக்கு நிச்சயதார்த்தம். இந்த வாரத்திலே நீங்க இரண்டு பேரும் வரப் போறதா கடுதாசி போட்டிருந்தானே?''

''ஆமாம்மா. ஆனா கடைசி நேரத்திலே இளங்கோவின் லீவு கேன்சல் ஆயிடுச்சு. ஆள் பற்றாக்குறை. எப்படியும் அடுத்த வாரத்திலே வந்துடுவான் இளங்கோ!''

கமலம் காப்பி கொண்டு வந்து கொடுத்தாள்.

''உத்தியோகம்னா அப்படித்தான். நினைச்ச மாதிரி எதையும் செய்ய முடியாது.. தம்பி நீங்க டிரஸ் மாத்திக்கிறதுதானே... எங்கே பெட்டி கிட்டி ஒண்ணும் காணோம்... கமலம் ஒரு வேட்டி கொடும்மா அண்ணனுக்கு!''

''மன்னிக்கணும். நாளை மறுநாள்தான் நிச்சயதார்த்தம். ஏற்கெனவே இரண்டு நாட்கள் லீவைச் சென்னையில் மாமா வீட்டில் 'வேஸ்ட்' பண்ணிட்டேன். நான் இப்பவே புறப்பட்டாகணும்.. பார்த்திங்களா, பேச்சு வாக்கிலே ஒரு முக்கியமான விஷயத்தை உங்களுக்குச் சொல்ல மறந்துட்டேன்...''

# உங்கள் குடும்பத்தினருக்கு நல்லதே வேண்டும்! அவர்களுக்கு கொடுங்கள் Kurl-on® சுகத்தை (கூடவே) உடலுக்கு தேவையான முழு சுகத்தையும் பெறுங்கள்.






MASS/KURLON/88

கர்லான் மெத்தைகள் மென்மையான குஷன்களை மேற்பரப்பில் கொண்டு தேங்காய் நார்களை மூடி, உங்களுடன் சுவாசிக்கிறது உங்கள் உடலுக்கு ஏற்ற அரவணைப்பு கொடுத்து, முழு சுகத்தையும் அளிக்கிறது.

சுகம், ஆதாரம், மற்றும் அழகிற்கு கர்லான்.

**Kurl-on®**

இதற்கு நிகரானது வேறு எதுவுமில்லை.

கர்நாடகா கன்ஸ்யூமர் ப்ராடக்ட்ஸ் லிமிடெட்
மார்கெட்டிங் டிவிஷன்,
III புளோர் இண்டஸ்ட்ரீ ஹவுஸ்,
45, பேர்பீல்ட் ரோடு, பெங்களூர்-560 001.
போன் 76746/72710

**Area Sales Offices: MADRAS:** 158, Pycrofts Road, Royapettah, Madras-600 014. Phone: 831710
**Hosur:** Zuzuvadi, Sipcot (P.P), Hosur-635 126. Phone: 6992.

"என்ன தம்பி?" என்றார் ஆறுமுகம்.

"இப்படி கொஞ்சம் எழுந்து வாங்க! அதோ அந்த வேப்பமரம் தெரியுதே, அந்த இடம்தான். அல்லது ஒரு நான்கைந்து அடி முன் பின்னதாக இருக்கலாம். மேலே கூடப் பாருங்க. எலக்ட்ரிக் லைன் போகுது. அதுலே ஒரு கம்பி கீழே ரோட்லியே விழுந்து கிடக்குது. ஆச்சு இன்னும் பத்து பதினைந்து நிமிஷத்திலே இருட்டு கட்டிட்டா; அப்புறம் அது யார் கண்ணிலும் படாது. நான் கூட இன்னைக்குத் தெய்வாதீனமாகத்தான் உயிர் தப்பிச்சேன். ஹெச். டி. லைன். எவனாவது மிதிச்சுட்டான்னா 'அய்யோ'ன்னு கூடச் சொல்ல விடாது.

"சரி நான் பார்த்துக்கிறேன் நீங்க புறப்படுங்க. மழை வந்தாலும் வரும்!"

"இப்போதைக்கு ஒரு லாந்தர் பொறுத்தி அந்த இடத்திலே வச்சுடுங்க. உள்ளூர்க்காரங்க வந்தா ஏதோ புதுசா விளக்கு எரியுதேன்னு யோசிச்சு நிதானமா வருவாங்க. நான் வர்றேன்" — அருண் புறப்பட்டான்.

"எவ்வளவு நல்ல குணம் பாருங்க... கமலம் அந்த அரிக்கேன் லைட்டைத் துடைச்சுக் கொளுத்தும்மா!" — இளங்கோவின் அம்மா கூறிவிட்டு, 'லைன்' கிடக்கிற இடத்திற்குப் புறப்பட்டாள்.

"எந்த அரிக்கேனைக் கொளுத்தி வைக்கப் போறே? ராத்திரி பூரா லைட் எரிஞ்சா அரை லிட்டர் மண்ணெண்ணெய் செலவாகும். எண்ணெய் போனாலும் பரவாயில்லே. விடிஞ்சு பார்த்தா உன் லைட்டே காணாமல் போயிட்டிருக்கும். தெரிஞ்சுக்கோ!"

"சினிமாவுக்குப் போனவன் எவனாவது ராத்திரியிலே வந்து மிதிச்சுட்டான்னா?"

"மிதிச்சா போய்ச் சேரட்டும்!"

"ஏங்க இப்படிச் சொல்றீங்க. அந்த ஹெல்பருக்காவது தகவல் கொடுங்க!"

"எந்த ஹெல்பர் இந்தக் காலத்திலே பட்டிக்காட்டிலே குடியிருக்கிறான்? அவனவன் டவுன்லே இருந்துகிட்டு ஆபீசர் கணக்கா வந்து போறானுங்க. நீ பார்க்கிறியே, எலிமெண்டரி ஸ்கூல் வாத்தியாருங்க யாராவது நம்மூர்லே தங்கியிருக்கிறாங்களா? எல்லாம் ஆத்தூர்லே இருந்து தான் வராங்க! பட்டிக்காட்டானுங்களுக்கே பட்டிக்காடு பிடிக்காமெ போன காலம் இது!"

"யாரோ எங்கேயோ குடியிருந்து தொலையட்டும். ராத்திரி அந்தக் கரண்ட் கம்பியிலே மாட்டி எவன் உயிராவது போயிட்டா என்ன செய்யறது?"

"பாருடி! இந்தக் கரண்ட் கம்பியிலே ஒருத்தன் சாகணும்னு விதி இருந்தா அவனை யாராலும் காப்பாற்ற முடியாது. அது அவனுக்காகவே அறுந்து விழுந்துருக்குனு அர்த்தம். புரிஞ்சுக்கோ!"

இளங்கோவின் தாயார் அதற்கு மேல் எதுவும் பேசாமல் உள்ளே போய் விட்டார். கமலம், அப்பாவிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். பிறகு நிறுத்திக் கொண்டாள். அவர் பிடிவாதக்காரர். முயலுக்கு மூன்று கால் ரகம்! அவளுடைய உள்ளுணர்வுக்கு மட்டும் ஏதோ ஓர் அசம்பாவிதம் நடக்கப் போவதாகப் பட்டது.

ஆத்தூர் பஸ் நிலையத்தில் இறங்கிய அருண் சேலம் பஸ்ஸிற்காக ஓர் ஓரமாக நின்று கொண்டிருந்த பொழுது அவனுக்கு மிகவும் அருகில் "இரண்டு முழம் மல்லிகை இரண்டு முழம் கனகாம்பரம்" என்று பரிச்சயமான ஒரு குரல் கேட்டது.

"ஹாய் இளங்கோ!"

"அடே, அருண்... என்னடா? இங்கே என்ன பண்ணறே..?"

"ஜஸ்ட் இப்போதான் உங்கள் வீட்டுக்குப் போய்ட்டுத் திரும்பி வந்தேன்."

"நீ பாலக்கோடு போய்ட்டு இன்னைக்குத் தான் இங்கே வர்றியா?"

"இல்லேடா. நான் மாமா வீட்லே இரண்டு நாள் தங்கிட்டேன். அது சரி உனக்கு எப்படி லீவ் கிடைச்சுது...?"

"அந்தக் குல்கர்னி லீவைக் கேன்சல் பண்ணிட்டு வந்து ஜாய்ன் பண்ணிட்டான்! பார் உனக்கு பஸ்... நாளை மறுநாள்தானே நிச்சயதார்த்தம். நான் நிச்சயம் வர்றேன்!"

"உனக்கு பஸ்?"

"எனக்கா... இன்னும் அரை மணி நேரத்திலே நான் அம்மம்பாளையத்திலே இருப்பேன். அதற்கடுத்த பத்தாவது நிமிஷத்தில் வீட்டில் இருப்பேன்!"

கைகளை ஆட்டியபடி நண்பர்கள் இருவரும் பிரிந்தார்கள்.

பாலக்கோடு பஸ்ஸில் ஏறிய பிறகு அருண் நினைத்துக் கொண்டான் — 'அடடா அந்த எச்.டி. லைனைப் பற்றி இளங்கோவிடம் சொல்லாமல் போனேனே...! ஆனால், அவன் அப்பா லாந்தர் கொளுத்தி வைத்திருப்பார்... அது இளங்கோவுக்கு எச்சரிக்கை செய்யும்.'

நன்றாக இருட்டிய பிறகு இளங்கோ அம்மம்பாளையத்தில் பஸ்ஸை விட்டு இறங்கினான்.

---

"'மந்திரிக்கழகு வரும் பொருள் உரைத்தல்'னு சொல்லியிருக்கு. நீங்க மந்திரியா இருந்தப்ப அப்படிச் செய்தீங்களா?"

"ஏன் செய்யாம? ஒவ்வொரு காண்ட்ராக்டர்கிட்டேயும் எனக்கு வர வேண்டிய பொருள் என்னன்னு முன்னமேயே சொல்லிடுவேனே!"

— வி. வித்யா.



# திரைக்கதை செக்ஷன் 302 படி...

## 17

நிவிதா, ஒரு விநோதமான குணச் சித்திரம். இரண்டு முகங்கள் கொண்டவள். வெளி முகத்தில் விவேகமும், வேகமும், கோபமும், தன்மானமும், தெளிவும், மண்டிக் கிடக்க... உள் முகத்தில் அவ்வளவுக்கும் எதிர்க் குணங்கள் பதுங்கி இருக்கும். பயம், குழப்பம், கவலை, படபடப்பு, அவசரம் அத்தனையும் உண்டு. ஆனால் அவளை இன்ன மாதிரியான பெண் என்று மிகச் சரியாகக் கணிக்க எவராலும் முடியாது.

அவளின் நடவடிக்கைகள், செயல்கள் அத்தனையையும் வைத்துப் பார்க்கும் போது... வெளிப் பார்வைக்கு நிவிதா ஒரு தைரியமான பெண்தான். ஆனால் இந்த அனுமானம் முழுக்கத் தவறானது. நிவிதா உள்ளுக்குள் அத்தனைக்கத்தனை துணிச்சலற்ற கோழைப் பெண்.

துணிச்சலாய்ப் பேசிவிட்டு உள்ளுக்குள் திக், திக் என்று பயப்படும் ரகம். தைரியமாகச் செயல்பட்டு விட்டு, உள்ளுக்குள் இப்படிச் செய்தது சரியில்லையோ என்று ஆயிரம் முறை புழுங்கும் ரகம்.

வினோத் குமாரின் மேல் ஏற்பட்ட காதலையே கூட உடனடியாக ஒப்புக் கொள்ளாதவள். இது வெறும் இனக் கவர்ச்சியா இல்லை உண்மையான நேசமா என்று மாதக் கணக்கில் பட்டி மண்டபம் அமைத்து ஒரு தெளிவுக்கு வர மிகத் தயங்கியவள்.

அப்படிப்பட்ட சிக்கலான மனநிலை கொண்ட நிவிதா முன், தற்சமயம் ஷியாம் குமார் சொல்லிச் சென்ற வார்த்தைகளின் அர்த்தங்களும், பின் விளைவுகளும் பூதாகாரமாய் எழுந்து நின்றன. அவளை வியர்க்க வைத்தன. கிறுகிறுக்க வைத்தன.

சிந்தனை ஒரு கட்டுப்பாட்டுக்குள் நிற்க மறுத்தது. மதம் கொண்ட யானையாய் எதிர்ப்படும் பொருள்களைத் துவம்சம் செய்து ஓடியது. கனவில் வருவது போல, தொடர்பின்றி, தொடர்ச்சியின்றிக் காட்சிகள் மனத்துக்குள் விரிந்தன.

இன்ஸ்பெக்டர் மிகப் பெரிய மீசை வைத்திருக்கிறார். கையில் அவளின் கைப்பை வைத்து நோக்கிறார். விழிகளை உருட்டி விசாரிக்கிறார்.

''செஞ்ச குற்றத்தை ஒப்புக்கிட்டா தண்டனை குறையும்மா!''

''சத்தியமா நான் திருடலை சார்'' என்கிறாள் நிவிதா பலவீனமான குரலில்.

உடனே ஓர் இருட்டான அறை. ஒரு பெண் போலீஸ் அதிகாரி இவள் தலைமுடியைக் கொத்தாகப் பிடித்துச் சுவரில் நச்சென்று மோதுகிறார்.

''சொல்லுடின்னா!'' என்று கன்னங்களில் மாறி, மாறி அறைகிறார்.

அலுவலகத்தில் திருட்டு!

இளம்பெண் கைது!

மார்பின் குறுக்கே கைகளைக் கட்டிக் கொண்டு வித்யாசாகர் முறைக்கிறான்.

வினோத்குமார் அமைதியாக அருகில் வந்து, ''நீ இவ்வளவு கீழ்த்தரமான பொண்ணுன்னு நான் நினைக்கவே இல்லை'' என்கிறான்.

அவன் அப்பா கையை ஆட்டிக் கத்துகிறார், ''கௌரவமான குடும்பத்துப் பொண்ணுன்னு நினைச்சேன். என் பையனைக் கட்டிக்கிறதா இருந்தேன்னு வெளில சொல்லிக்காதே. அவன் கல்யாணம் பிரச்னையாயிடும்.''

ஜட்ஜ் பச்சை மையில் கையெழுத்துப் போட்டுவிட்டுத்தீர்ப்பைப்படிக்கிறார், ''ஆக, குற்றம் சுமத்தப்பட்ட குமாரி நிவிதா குற்றவாளிதான் என்று சரியாக நிரூபணம் ஆகி உள்ளபடியால் அவர் செய்த குற்றங்களுக்காக மொத்தம் ஐந்தாண்டுகள் சிறைத் தண்டனை வழங்கித் தீர்ப்பெழுதுகிறேன்.''

நிவிதா வேனில் ஏற... வேடிக்கை பார்க்க வந்த கூட்டம் முழுக்க நக்கலாகச் சிரிக்கிறது. ''பார்த்தாப் பசு மாதிரி இருக்கா, என்ன என்ன காரியம் செஞ்சிருக்கா பார்த்தியா?'' என்று பேசிக் கொள்கிறது.

சிறையில் நிவிதாவுக்குத் தந்தி வருகிறது! 'அவமானம் தாங்காமல் அம்மா தற்கொலை செய்து கொண்டாள்!'

''நோ'' என்று வாய்விட்டு லேசாகக் கத்தியே விட்ட நிவிதா, அத்தனையும் கற்பனை மன ஓட்டங்கள்தான் என்றுத் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்ளவே சில விநாடிகள் பிடித்தன.

வாட்டர் கூலரில் தண்ணீர் பிடித்த போது தன் கரங்கள் லேசாக நடுங்குவதைத் துல்லியமாக உணர்ந்தாள். நடையில் தடுமாற்றம் வந்திருந்தது.

தனது நாற்காலியில் அமர்ந்தாள்.

என்ன செய்யப் போகிறேன் நான்? பொறியில் சிக்கின எலியின் நிலை. மிகத் துல்லியமாகத் திட்டமிட்டு என்னை வசையாக இதில் சிக்க வைத்திருக்கிறான். மிக அழுத்தமான ஆசாமி.

பட்டுக்கோட்டை பிரபாகர்

இப்போது நான் புறப்பட்டு என் விடுதிக்குப் போகலாம். அங்கிருந்து புறப்பட்டு எங்காவது போய் விடலாம். அது பிரச்னையைத் தள்ளிப் போடும். தடுத்து நிறுத்தாது. என் மீது சுமத்தப்பட இருக்கிற குற்றங்களை மேலும் ஊர்ஜிதம் செய்யும்.

இந்தப் பிரச்னையிலிருந்து தப்ப... ஒரே வழி... அவன் எண்ணத்திற்குச் சம்மதிப்பது. ச்சீ! முடியாது. முடியவே முடியாது. என்னால் முடியாது.

அவன் விருப்பத்திற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் பட்சத்தில்... நிச்சயமாகச் சொன்னபடி போலீசை அழைக்கப் போகிறான். அதன்பின்... அவமானங்கள்! குற்றச் சாட்டுக்கள். கிடுக்கிப் பிடியாகச் சாட்சியங்கள். என் மறுப்பை எவரும் சட்டை செய்யப் போவதில்லை. கற்பனைக் காட்சிகள் அனைத்தும் உண்மைக் காட்சிகளாக நடக்கும்.

என் வாழ்க்கை, லட்சியம், கனவு, குடும்பத்தின் மானம், எதிர்காலம் அத்தனையும் தவிடு பொடியாகும்.

இவ்வளவு நேரம் அடக்கி, அடக்கி வைத்திருந்த இயலாமை பூசின அழுகை வேகமாக இமைகளை மோதிக் கொண்டு வெளிப்பட... அப்படியே மேஜையில் கவிழ்ந்து கொண்டு முதுகு குலுங்க, ஓசை வராமல் அழ ஆரம்பித்தாள் நிவிதா.

பொதுவாகவே எல்லா உணர்வுகளுக்கும் ஓர் எல்லை உண்டு. காதல், கோபம், காமம், அழுகை என்று எதானாலும் சரி... ஓர் எல்லையில் சட்டென்று வேகம் குறையும்.

ஐந்து நிமிடங்களுக்கு மேல் அழுது கொண்டிருந்த நிவிதா சட்டென்று தன் விசும்பலை நிறுத்தினாள். சுய இரக்கம் வடிந்து போய் ஒருவித ஆவேசம் குடி வந்திருந்தது.

நான் யார்...? படித்தவள். சுதந்திரமானவள். உத்தியோகத்திற்கு வருபவள். சில நாட்களில் திருமணம் செய்து கொள்ளப் போகிறவள். எனக்கென்று ஒரு குடும்பம் உண்டு. அன்புள்ளங்கள் உண்டு. இனிய காதலன் உண்டு. ஓர் அனாதை போல இவ்வளவு பெரிய அலுவலகத்தில் தனியாக உட்கார்ந்து அழுது கொண்டு...

சேச்சே...

எந்தப் பிரச்னையாய் இருக்கட்டுமே... நேருக்கு நேர் சந்தித்துப் பார்ப்பதை விட்டு விட்டு இதென்ன கோழைத்தனம்? நான் எந்தத் தவறும் செய்யவில்லை. இது என் மனத்துக்குத் தெரியும். பின் எதற்காகப் பயப்பட வேண்டும்?

கேடு கெட்ட ஒருவன் கேவலமாக ஒரு நிபந்தனை விதித்ததோடு மட்டும் இல்லாமல்...



ஒரு மணி நேரம் அவகாசம் வேறு கொடுத்து விட்டுப் போயிருக்கிறான்.

நான் என்ன அவன் அடிமையா? பெண் என்றால் அத்தனை இளக்காரமா? பூவுக்கும், புடைவைக்கும் மயங்கவில்லை என்பதற்காகப் புத்தியால் சிறைப்படுத்தினானும். ராஸ்கல்!

அறிமுகமில்லாத எவனோ என்னை ஒருமையில் விளித்துப் பூச்செண்டு அனுப்பினதற்கே எப்படித் துடித்துப் போனேன்? புடைவை பார்சலைக் கையால் தொடக் கூட எவ்வளவு கூசினேன்? அப்படிப்பட்ட என்னை...

இதெல்லாம் நான்தான் செய்தேன், இக்கட்டில் இருந்து தப்பிக்க வேண்டுமென்றால் என்னோடு படுக்கையைப் பகிர்ந்து கொள்கிறாயா என்று கூசாமல் கேட்டுவிட்டுச் சென்றிருக்கிறான். சட்டையைப் பிடித்துக் கை வலிக்கும் வரை அறைய வேண்டிய நான் உட்கார்ந்து அழுது கொண்டிருக்கிறேன்.

எல்லாம் எதனால்?

தெரியாத்தனமாய் இவன் ஏற்பாடு செய்த சிக்கலில் மாட்டிக் கொண்டதால். இல்லை. தெரியாத்தனம் இல்லை. நான் இயல்பாகத்தான் நடந்து கொண்டேன். நீரில் நீந்துதல் மீனின் தெரியாத்தனமா? அது அதன் இயல்பு. தூண்டிலில் சிக்காத மீன் என்பதால் வலைவீசிப் பிடித்திருக்கிறான்.

புத்தி சாதுர்யத்தால் நெய்யப்பட்ட வலை!

புத்திசாலித்தனம் என்பது இவன் ஒருவனுக்கு மட்டுமே சொந்தமான விஷயமா? கத்தி பழமும் நறுக்கும், குரல்வளையையும் நறுக்கும். என்னாலும் மூளையை விசேஷமாகப் பயன்படுத்த முடியும். குறுக்கில் சிந்திக்க முடியும்.

சாமர்த்தியத்தால் என்னை மடக்கி விடலாம் என்று இறுமாப்புடன் நேரம் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறாய். பதில் சாமர்த்தியம் காட்டத் தெரியும் என்று உனக்கு உணர்த்த வேண்டும்.

எப்படியும் இந்தச் சிக்கலில் இருந்து தப்பிக்க வேண்டும். ஷியாமின் அடாவடித்தனத்திற்குச் சரியான பதிலடி கொடுக்க வேண்டும் என்கிற அழுத்தமான, தீர்க்கமான சிந்தனையே நிவிதாவிற்குள் புதிய பலத்தைச் சேர்த்தது.

சிந்தனையின் தீவிரம் யோசனைகளைக் காலடியில் கொண்டு வந்து கொட்ட ஆரம்பித்தது. ஒவ்வொன்றாக யோசித்தாள். முள்ளில் விழுந்த சேலையை எடுக்கிற காரியம் இது. ஆத்திரம், படபடப்பு எல்லாவற்றையும் தூக்கி வைத்து விட்டு நிதானமாகச் செய்ய வேண்டிய காரியம் இது.

யோசி!

யோசி!

யோசி!

அடுத்த பத்தே நிமிடங்களில் நிவிதா ஒரு யோசனையைத் தேர்ந்தெடுத்தாள். ஷியாம் வருவதற்குள் அதைச் செயலாக்க எழுந்தாள்.

தனது வீட்டிற்கு வந்த ஷியாம், டிரை

# அதிக சக்தி, அதிக போஷாக்கு,



## அதிக சாக்கலேட் சுவை...

அருந்துங்கள்

கேம்ப்கோ

# வின்னர்




இது ஒரு சுவை மிகுந்த மாறுபட்ட சாக்கலேட் பானம். அதிக சக்தியை அளிப்பதற்காக குளுக்கோஸ் நிறைந்தது. போஷாக்கினை அளித்திட வைட்டமின்கள் மற்றும் தாதுச் சத்துக்களைக் கொண்டது.

மேலும் குழந்தைகள் மிகவும் விரும்பிடும், இதுவரைக் கிடைத்திராத அதிக சாக்கலேட் சுவை.

அருந்திப் பாருங்கள். இதைவிடச் சிறந்ததொரு சுவை மற்றும் சக்திமிக்க சாக்கலேட் பானம் இல்லை என்பதைக் கண்டுகொள்வீர்கள்.

**இந்தியாவின் மிகப்பெரிய அதிநவீன ஆலை அளிப்பது.**

**கேம்ப்கோ லிமிடெட்**
மங்களூர்.

R K SWAMY/CL/5828

**நினைவிருக்கிறதா? இந்த நாவலைக் கவனமாகப் படித்து வருகிறவர்களுக்கு எளிய போட்டியும் ரூ. 1000 பரிசும் காத்திருக்கின்றன!**

வரை அனுப்பிவிட்டு உள்ளே வந்தான். கோட்டையும், டையையும் கழற்றி வீசினான். பாத்ரூம் சென்று முகம் கழுவினான். டைம் பார்த்துக் கொண்டான்.

இன்னும் அரை மணி நேரம் இருக்கிறது.

நிவிதா இந்நேரம் தவித்து, திணறி ஒரு தீர்மானத்திற்கு வந்திருப்பாள். என்னை எதிர்ப்பதாகத் தீர்மானித்திருக்க வாய்ப்பே இல்லை. அவமானம் விரும்பாதவள் அவள். அவளின் நெருக்கடியான சூழ்நிலை நன்றாகவே உறைத்திருக்கும். அவளுக்கு என்னை அணைப்பதைத் தவிர வேறு வழியே இல்லை.

தன் நோக்கத்தில் வெற்றி பெறப் போவதில் உற்சாகம் உச்சந்தலை வரை ஏறியிருந்தது. ஷியாம் அவசரமாகத் தலைசீவி, பவுடர் ஒற்றிக் கொண்டான். ஜூரசான உடை அணிந்து, செண்ட் பீய்ச்சிக் கொண்டான்.

ரெஃப்ரிஜிரேட்டர் திறந்து ஒரு வெளிநாட்டு விஸ்கி பாட்டிலை எடுத்து, எதுவும் கலக்காமல் அப்படியே வாயில் வைத்து இரண்டு மடக்குக் குடித்துவிட்டு வைத்தான்.

புறப்படும் முன் போனெடுத்தான்.

"ஹலோ, தீபக் ஹியர்."

"தீபக், ஷியாம் பேசறேன். என்னை ஆசீர்வாதம் செய்டா."

"இன்னிக்குச் சோதனை நாள் இல்லே? எங்கேர்ந்து பேசறே?"

"வீட்லேர்ந்து. சோதனை நாள் இல்லை. வெற்றி நாள். நிவிதா எனக்காகத் தயாரா ஆபீஸ்ல காத்திருக்கா... நான் இதோ புறப்பட்டுக்கிட்டே இருக்கேன்."

"அட! சம்மதிச்சாச்சா?"

"சம்மதிச்சிடுவா. வேறே வழி ஏது தீபக்? எல்லா சஸ்பென்சையும் உடைச்சிட்டு, நிபந்தனை போட்டுட்டு ஒரு மணி நேரம் யோசிக்க நேரம் கொடுத்துட்டு வந்தேன். அப்படியே திகைச்சுப் போய்ட்டா. பேச்சே வரலை."

"ஆல்திபெஸ்ட். பிரச்னையாகிடாமப் பார்த்துக்கப்பா."

"வயலென்சே கிடையாது. பூ பறிக்கிற மாதிரி மென்மையாத்தான் அவளைத் தொடப் போறேன். ராத்திரி வெற்றிச் செய்தியைச் சொல்றேன்."

"ஓக்கே!"

ஷியாம் போனை வைத்துவிட்டு, வீட்டைப் பூட்டிக் கொண்டு, காரை ஓட்டினான். மாலை நேரப் போக்குவரத்து அதிகரித்திருக்க... அவசரத்தில் சில இடங்களில் விதிகளை மீறிச் செலுத்தினான். மனத்திற்குள் ஒரு பரவசப் பறவை படபடவென்று இறக்கைகளை அடித்துக் கொண்டது.

நிவிதா! ஸ்வீட் லிட்டில் ஏன்ஜல்!

இன்னும் சில விநாடிகளில் என் அரவணைப்பில். என் மார்பில் சாய்வாள். அவள் நெற்றியில் வகிடுக் கோட்டில் துவங்கி இன்ச் இன்ச்சாகப் பாதம் வரை என் ஆளுகையில் இருக்கும்.

தன் அலுவலகக் கட்டடத்தின் போர்ட்டிகோவில் காரை நிறுத்திவிட்டு, லிஃப்டைச் சொந்தமாக இயக்கிக் கொண்டு தன் தளம் வந்தான். அலுவலக வாசலில் வாட்ச்மேன் சட்டென்று எழுந்து நின்றான்.

"நிவிதா இன்னும் ஓ. டி. முடிஞ்சி போகலையா?" என்றான்.

"இல்லை சார்."

"எனக்கும் கொஞ்சம் வேலை இருக்கு" என்று கூறிவிட்டுக் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்து, திரும்பி, வளைந்து அந்த அக்கவுண்ட்ஸ் செக்ஷன் வந்த போது... தன் நாற்காலியில் அமர்ந்திருந்த நிவிதா நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்.

அவள் அருகே வந்து, "என்ன நிவிதா, முடிவுக்கு வந்துட்டியா?" என்றான்.

"வந்துட்டேன். உங்களுக்காகத்தான் காத்திருக்கேன்" என்றாள் நிவிதா.

(தொடரும்)

புதிய

# லிப்டன் டாப் ஸ்டார் டீ
# சுவையே அதன் வலிமை



லிப்டன் டாப் ஸ்டார்.
சுவைதான் எப்போதும்
இதன் மாபெரும்
வலிமை. இப்போதுஇது
இன்னும் மேன்மையாக
திகழ்கிறது. ஏனெனில்
இவ்வகை இதர டீக்களைவிட அதிக சுவையும்
திண்மையும் கொண்ட மிஞ்சிடும் கலவையை புதிய
லிப்டன் டாப்ஸ்டார் கொண்டுவந்துள்ளது.
முயன்றுதான் பாருங்களேன்!
வேறுபாட்டினை நீங்களும் உணர்ந்திடுவீர்.

இப்போது லிப்டன் டாப் ஸ்டார் பொலிவான
திய பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

லிப்டன்

ாப் ஸ்டார் டீ

சியும் சக்தியும்
வற்றிகரமான கொண்ட இணைப்பு




LINTAS BLORE LIL TS P1 2416 TAM

**ப**ழையது பிழிந்து வைக்கப்பட்ட தட்டு வேகமாக ஒரு மூலைக்குப் பறந்தது. அதை விட வேகமான, சூடான சொற்கள் சேகரின் வாயிலிருந்து தெறித்தன.

''இந்த வீட்டிலே எப்பவும் அல்லி ராஜ்யம்தானா? நானும் கவனிச்சுக்கிட்டேதான் வர்றேன். ஏம்மா, இது உனக்கே நல்லாயிருக்கா?''

''எதுக்குடா இப்படி ஆட்டம் போடறே. இப்ப என்ன நடந்தது?''

''என்ன நடந்ததா? இன்னும் என்ன நடக்கணும்? உனக்குப் பொம்பளைப் பிள்ளைன்னா எப்பவும் உசத்திதான். நான் இட்லியைக் கண்ணால் பார்த்து நாலு நாள் ஆவுது. எப்பப் பார் சோறு... சோறு... சோறு. ஆனால் சுந்தரி அக்காவிற்கு மாத்திரம் என்ன, இரண்டு வேளை டிபன். ஸ்பெஷல் தயிர். புத்துருக்கு நெய். அவளைத்தான் பெத்தியா, என்னைப் பெக்கலையா...?''

''என்னடா இது சேகர்? இப்படியெல்லாம் பேச உனக்கு எப்படி மனசு வருது? எனக்கு எல்லோரும் ஒண்ணுதான்...''

''ஆகாகா... நீங்க கண்ணீர் வடிச்சா நான் ஏமாந்திடுவேனா? எல்லாம் ஷோ. வசந்தி



# சூழ்நிலைக் கைதிகள்

—சங்கரி அப்பன்—

அக்கா கல்யாணமாகிப் போகிற வரை அவளுக்கு மட்டும் எல்லாம் ஸ்பெஷல். இப்ப சுந்தரி அக்காவுக்கு. நான் மட்டும் இந்த வீட்டிலே இளிச்ச வாயனா? மண்ணைத்தான் திங்கணுமா?''

''பாருங்களேன், எப்படிப் பேசறான்னு...!''

''கனகா... நீ பேசாமல் இரு. இவன் முரடன். இவன்கிட்டே வாயைக் கொடுக்காதே.''

— ரொம்ப வருஷமாய்க் கட்டிலோடு கிடக்கும் சேகரின் தந்தை தீனமாய்ப் பேசினார். கனகம் விசும்பிக் கொண்டே அவர் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள். சுந்தரி எதுவும் பேசாமல் தன் பாட்டில் புத்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தாள்.

சேகருக்குச் சூடு ஆறவில்லை. அவன் மனசு இன்னும் கொதித்துக் கொண்டிருந்தது. தான் பெற்ற பிள்ளைகளுக்குள்ளேயே இப்படிப் பாகுபாடு பார்க்கும் பெற்றோர் மேல் அவனுக்கு வெறுப்பு ஏற்பட்டது. எங்கேயாவது இவர்களை விட்டுவிட்டு ஓடிவிட வேண்டும் போல் ஆவேசம் ஏற்பட்டது. பேசாமல் புறக்கடைப் பக்கம் உள்ள துவைக்கும் கல்மேல் போய் உட்கார்ந்து கொண்டான்.

எவ்வளவு நேரம் அப்படி உட்கார்ந்து இருந்தானோ. அவனுக்கே ஞாபகமில்லை. சில்லென்ற ஒரு குரல் அவனைத் தூக்கிப் போட வைத்தது.

''சேகர்...''

சுந்தரியக்காதான் கூப்பிட்டாள்.

''என்ன யோசனை...? தூக்கம் வரலையா? மணி பத்து...'' அவன் பதில் ஒன்றும் சொல்லாமல் வானத்து நிலவைப் பார்த்தான். அவன் மனம் சமாதானம் அடைந்திருக்கவில்லை.

''ஏதாவது பேசு சேகர்...''

''என்னத்தைப் பேச...?''

''உனக்குப் பிடிச்ச ஒரு கேள்வி கேட்கிறேன், பதில் சொல்றியா...?''

அவன் சின்ன சுவாரஸ்யத்துடன் சுந்தரியைப் பார்த்தான். ''என்ன...?''

''தமிழ்நாட்டிலே இ. காங்கிரஸ் ஆட்சிக்கு வருமா?

உடனே அவனுக்கு உற்சாகம் பிறந்தது. அரசியல் பேசுவது அவனுக்கு அல்வா சாப்பிடுவது மாதிரி. ''அதெல்லாம் ஒண்ணும் வராதுக்கா!''

''என்னடா அப்படிச் சொல்லிட்டே? டெல்லி இப்பொழுது தமிழ்நாட்டுக்கு நிறையச் சலுகைகள் வழங்க ஆரம்பிச்சிருக்கு. பார்த்தேயில்லே...?''

''என்ன சலுகை?''



"தமிழ் நாட்டுக்கு அதிக அரிசி ஒதுக்கப் பட்டிருக்கு. சென்னைத் தொலைக்காட்சியில் இரண்டாவது வரிசை ஒளி பரப்பு தொடங்கப் போவுது. காவிரித் தண்ணீர் தகராறு ஒரு நீதிபதியின் தீர்ப்புக்கு விடப்பட்டுள்ளது. சென்னையிலே அதிவேக ரயில் பாதை போடத் தொடக்க விழா நடைபெறப் போகுது..."

சேகர் படபடவெனக் கையைத் தட்டினான்.

"அக்கா... இதெல்லாம் நிஜமான அக்கறைன்னு நினைக்கிறியா? ஓட்டு வாங்கச் செய்யப்படும் பேரம்..."

"அப்படியா...?"

"இதிலே போய் மயங்கிட்டியே?"

"நான் மயங்கலே. நீதான் மயங்



கிட்டே.''

''என்ன நானு!''

ஏளனமாகச் சிரித்தான் சேகர். அக்கா இத்தனை முட்டாளாக இருக்கியே என்கிற பார்வையாய்ப் பார்த்தான்.

''சேகர்... கவனமாகக் கேள். எனக்கு ஸ்பெஷல் நெய், தயிர், இரண்டு வேளை டிபன் போன்ற கவனிப்பெல்லாம் பார்த்து நீதான் மயங்கிட்டே.''

''அக்கா...!''

''அம்மாவுக்கு என் மேலேயும், வசந்தி மேலேயும் பாசம் அதிகம். அதனாலே இந்த ஒதுக்கீடுன்னு மயங்கி, உனக்கும் அதுபோல் அம்மா பாசம் கிடைக்கலேன்னு ஏங்கிட்டே இல்லே...?''

''......''

''இதுவும் ஒரு பேரம்தான் சேகர். சம்பாதிக்கிற மூத்த மகள் வசந்திக்கு முதல்லெ சலுகைகள் கிடைச்சது. அவள் கல்யாணமாகிப் போய்விட்டாள். இப்ப நான் சம்பாதிக்கிறேன். அதனாலே எனக்கு இந்தக் கவனிப்பு. சம்பாத்தியத்தின் அடிப்படையில் எழுந்தது தான் இந்த அக்கறை, சேகர். மற்றபடி நீ நினைப்பது மாதிரி பாசத்தின் அடிப்படையிலே ஏற்பட்டது இல்லே...''

சுந்தரி அன்புக்கு ஏங்கும் குழந்தை மாதிரி முகமெல்லாம் துயரம் படர நின்றாள். சேகர் அதிர்ந்து பேச்சற்றுப் போனான்.

''பெற்றோர்கள் சூழ்நிலைக் கைதிகளாக ஆயிட்டாங்க. அப்பாவின் சம்பாத்தியம் இல்லாமல் போயிட்ட இக்குடும்பத்துக்கு, எங்க ரெண்டு பேரோட பணம் ரொம்ப அவசியமானதாகப் போச்சு. பாவம் அம்மா, எங்கே தன்னைத் தெருவிலே, சீக்காளி அப்பாவோட விட்டுட்டுப் போயிடுவோமோ என்ற பயத்திலேயே அவளுக்குப் பாசம் மறந்து போச்சு... சரி, சேகர். இனி மேல் இப்படி ரகளை பண்ணாதே. புரிஞ்சுக் கிட்டேயில்லே...''

சேதர் கண்களில் கண்ணீர் நிரம்பியது. அம்மா, இயல்பாக இல்லாமற் போனதற்கான காரணம் புரிந்தது.

''இந்தா, உனக்கு ப்ரெட்டும் ஜாமும் வாங்கிக்கிட்டு வந்திருக்கேன், சாப்பிடு...''

''வேண்டாம்... எனக்குப் பழையதே போதும்.''

டையலாக் அடிச்சது போதும். வயசுப் பிள்ளை ராத்திரி சாப்பிடாமல் படுக்கக் கூடாது. நீதான் சோத்தை விசிட்டியே! உனக்காக நான் பேக்கரியிலே போய் வாங்கிட்டு வந்தேன், சாப்பிடு...''

அக்கா ஜாம் தடவிய ரொட்டித் துண்டைக் கொடுக்க, தம்பி நெகிழ்வுடன், பெற்றுக் கொண்டான். தமக்கையின் நிஜமான பாசம் தனக்கு இருக்கிறது என்ற சந்தோஷத்தில் அவனுக்குப் புதுத் தெம்பு பிறந்தது.



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ. கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 85 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/– ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/– மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/– அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D–76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்–612 001.

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.









* பவ்வகை வீச்சு

நீங்கள் கேட்டவை — தராசு

# தேர்தல் எப்போது வரும்?

* வி. சக்திவேல், கொடைக்கானல்.

? தமிழகம் குட்டிச்சுவராகப் போக, வேறு மாநில முதல்வர் யாரையேனும் சிபாரிசு செய்யச் சொன்னால் யாரைக் குறிப்பிடு வீர்கள்?

! ஜே. பி. பட்நாயக்.

* வி. ஸ்ரீநிவாசன், பின்னத்தூர்.

? வடதில்லி போலீஸ் கமிஷனர் கிரண் பேடி, போதைப் பொருள் கடத்தல் தடுப்புப் பிரிவுக்கு மாற்றப்பட்டுள்ளாரே?

! அவர் கடமை வீரர். எங்கிருந்தாலும் புகழ் பெறுவார்.

* கா. அப்துல்மஜீத், திருமயம்.

? பஞ்சாப் தீவிரவாதிகளுக்கு ஆயுதங்கள் வழங்கி வந்த பாகிஸ்தானின் ஆயுதக் கிடங்கு எரிந்தது அந்நாட்டுக்கு ஒரு படிப் பினைதானே...?

! ஆனால் அக்கம் பக்கத்திலிருந்த ஆயிர மாயிரம் அப்பாவிகள் அநியாயமாகப் பலி யானார்களே, என்பதுதான் வேதனை. குடியிருப்புக்களின் அருகே யுத்த தளவாடக் கிடங்கை வைத்திருந்த மடமையை என் னென்று சொல்ல!

* கே.எம். ஜான் முஹம்மது, இளையான்குடி.

? தன்னைப் பெற்றெடுத்த சமுதாயத்தின் உயர்வுக்காகப் பாடுபட்ட தலைவர்கள் சில ரில் எப்போதும் தங்களை வெகுவாகக் கவர்ந்த தலைவர் யார்?

! ராஜாஜிக்குப் பிறகுதான் மற்றவர்கள்.

* எஸ். பிரியதர்சனி, பாளையங்கோட்டை.

? 'இருபதாண்டு திராவிட ஆட்சியினால் தான் வேலையில்லாதோர் எண்ணிக்கை அதிகரித்து விட்டது' என்று மத்திய அமைச் சர் சிதம்பரம் கூறியிருக்கிறாரே...?

! திராவிட இயக்கத்தினர் ஒருவர் இல்லா விட்டால் இன்னொருவருக்கு மாறி மாறி ஆதரவு தந்து, பதவியில் அமர உதவியவர் கள் இப்படிப் பேச உரிமை இல்லை என்பது ஒருபுறமிருக்க, நாற்பதாண்டுகளாக இருந்து வரும் காங்கிரஸ் ஆட்சிகளில் பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடுகிறதாமா?

* பிரியபாரதி, போடிநாயக்கனூர்.

? தேர்தல் எப்போது வருமாம்?

! தனக்குச் சாதகமான சூழ்நிலை நிலவுவ தாக இ. காங்கிரஸ் எண்ணும் போது!...

* சே. இரமேஷ், பள்ளிபாளையம்.

? தமிழ்நாட்டில் குண்டு வெடிப்பு சம்பவங் களுக்கு திமுக தலைவர் கருணாநிதிதான் காரணம் என்று மூப்பனார் குற்றம் சாட்டியுள் ளாரே?



* கடமை வீரர்

• பூ கி நன்றி





* வழக்கின் நோக்கம்

! கொடைக்கானலிலும் கத்திப்பாராவிலும் வெடித்தவை நிஜ குண்டுகள்; மூப்பனார் வெடிப்பது புரளி குண்டு.

* ஆர். மதுசூதன், நீடாமங்கலம்.

? தயிர் வடைக்கு மேலே தூவ ஏற்ற மொற மொற அயிட்டம் எது?

! 'இது போன்ற கேள்விகளுக்கெல்லாம் தராசு பதில் கூற வேண்டுமா?' என்று சிலர் பாய்வார்கள் என்றாலும்... காரா பூந்தியை கொஞ்சமாக மேலே தூவி, கொத்து மல்லியை பொடிசாக நறுக்கித் தூவி, நாலு சின்னத் துண்டு இஞ்சி, நெய்யில் வறுத்து உடைத்த முந்திரிப் பருப்பு சேர்த்து... போது மய்யா, நாக்கில் ஏகமாக ஜலம் ஊறுகிறது!

* வசந்தி பிரியன், கரூர்.

? தற்போது நெடுஞ்செழியனும் பண்ருட்டியாரும் அமைதியாக இருக்கிறார்களே, என்ன காரணம்?

! செல்வியின் செல்வாக்கை நம்பி வந்தவர்கள் அடங்கிப் போக வேண்டியது தானே!

* டி. வி. பாலசுப்பிரமணியம், கோட்டார்.

? பரீட்சை விடைத்தாள்களை அஜாக்கிரதையாகக் கையாண்டவர்களுக்குத் தண்டனை கொடுப்பார்களா?

! அவர்களுக்குக் கொடுப்பார்களோ மாட்டார்களோ, மாணவர்களுக்குக் கொடுத்து விட்டார்கள், மறு பரீட்சை எழுதச் சொல்லி!

* கோ. க. சுரேஷ், கோவை.

? பிரதமர் ரயில் பயணம் போவது தலைப்புச் செய்தியா?

! விமானம் அல்லது ஹெலிகாப்டரில் பறக்காமல் ரயிலில் போனது அதிசயம், அதனால் செய்தி என்பது ஒருபுறமிருக்க புதிய ரயில் நிலையத்தை நிரந்தரமாக்க இந்தப் பயணம் உதவி இருக்கிறதே, அந்த மட்டில் மகிழ்ச்சி!

* சீர்காழி சாமா, தென்பாதி. *

? ஆவடி காங்கிரஸுக்கும், முப்பதாண்டுகளுக்குப் பிறகு நடத்த மறைமலை நகர் மாநாட்டுக்கும் என்ன வித்தியாசம்?

! தியாகத்துக்கும் சுயநலத்துக்கும் இடையில் உள்ள வித்தியாசம்தான்!

* வி. என். சிவகுமார், கோவை.

? மூப்பனார் தலைவரான பிறகு பழனியாண்டி என்ன செய்து கொண்டிருக்கிறார்?

! மூப்பனார் தலைவராவதற்கு முன்புதான் அவர் என்ன செய்து கொண்டிருந்தார்?

* ஏ. பி. சுந்தர், மதுரை — 2.

? பெருமதிப்பிற்குரிய பூரி சங்கராச்சாரியாரை 'பூரியார்' என்று மரியாதைக் குறைவாகக் குறிப்பிட்டிருக்கிறீரே?

! அவருடைய நோக்கம் பற்றி வந்த செய்திகள் அவரிடம் மரியாதைக் குறைவை உண்டாக்கின. ஆனால் இப்போது அவர் உச்ச நீதிமன்றத்தில் தாக்கல் செய்துள்ள வழக்கில் தமது நோக்கத்தைத் தெளிவு படுத்தியுள்ளார். அதன்படி அவர் உடன் கட்டை ஏறுவதையோ கணவனுடன் சேர்ந்து மனைவி புதைக்கப்படுவதையோ ஆதரிக்கவே இல்லை. மத்திய அரசு நிறைவேற்றியுள்ள சட்டத்துக்கு, "சதி தடைச் சட்டம்" என்று பெயரிட்டிருக்கிறது; சதியைப் போற்றுவது தடை செய்யப்பட்டுள்ளது. சதி என்பது ஹிந்து மதத்தின் ஒரு தொன்மையான ஏற்பாடு என்றும், சதி ஆலயங்கள் இந்தியாவில் நிறைய உள்ளன என்றும், அங்குள்ள சடங்குகளை நிறைவேற்றுவது கூட இந்தச் சட்டத்தால் குற்றமாகக் கருதப்படுமென்றும், இது, மத சுதந்திரத்துக்கு முரணான ஒன்று என்றும் கூறியிருக்கிறார். சட்டத்தில் "சதி" என்ற வார்த்தை பயன்படுத்தப்படுவதைத்தான் அவர் எதிர்க்கிறார். உச்ச நீதிமன்றம் சரியான தீர்ப்பு வழங்கி, பிரச்னைக்கு முடிவு கட்டும் என்று எதிர்பார்ப்போம்.

* சித்ரபானு, விருத்தாசலம்.

? தம் மீது பலகை வீசியவர் மீதான வழக்கை வாபஸ் பெறுமாறு ஜானகி கோரியுள்ளாரே?

! இது ஜானகியின் பெருந்தன்மையைக் காட்டலாம்; பிராபல்யத்துக்கு உதவலாம்; ஆனால் சட்டத்தின் ஆட்சிக்குத் துணை நிற்பதாகாது. இதில் மற்றொரு அம்சமும் உண்டு. கத்தி வீசுதல், கட்டை வீசுதல் போன்ற காரியங்களில் மக்கள் இறங்கக் காரணம் என்ன? கட்சிக்குச் சிறந்த கொள்கைகளை உருவாக்கி, அவற்றைப் பிரசாரம் செய்வதை நோக்கமாகக் கொள்ளாமல், ஒருவரை ஒருவர் ஆபாசமாகத் தாக்கி ஏசுவதையே சொற்பொழிவுகளாக்கும் போது, அதற்கு அடுத்த கட்டமாக வன்முறைத் தாக்குதல்கள் ஆரம்பமாவதில் வியப்பில்லை.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

சீர்காழி சாமா,
16, படேல் தெரு,
தென்பாதி,
சீர்காழி — 609 111.

# தாத்தா ஏதோ மறுபடியும் குறும்பு செய்யப் போகிருர்!

தாத்தா அருகிலிருந்தால் ஒரு நொடிகூட மந்தமாக இருக்காது. பேரக்குழந்தைகளுக்கு புதுப்புது வேடிக்கைகள் காட்டுவது பற்றியே யோசித்துக் கொண்டிருப்பார். 65 வயதிலும் உலகிலேயே சுறுசுறுப்பான தாத்தா அவர்தான்!

ஹார்லிக்ஸ்தான் அதற்குக் காரணம். இத்தனை வயதிலும் அவர் ஆரோக்கியமாகவும், சுறுசுறுப்பாகவும் இருக்க அது உதவுகிறது.

டாக்டர் சிபாரிசு செய்ததுபோல அது ஊட்டச்சத்து மிகுந்தது; மிக எளிதில் ஜீரணமாவது.

ஹார்லிக்ஸ் — ஒரு நாளைக்கு இரு முறை பருகுவது அவருக்கு விருப்பமான பழக்கமாகிப் போனதில் வியப்பில்லை.

ஹார்லிக்ஸ் முக்கிய இயற்கை ஊட்டச்சத்துக்கள் நிறைந்தது. சக்தியும், தெம்பும், நல்ல ஆரோக்கியமும் கொடுக்கும் புரதம், வைட்டமின்கள் தாதுப் பொருட்கள், மாவுச்சத்து. ஆகிய சத்துக்கள் எளிதில் ஜீரணமாகும் வகையில் இதில் அடங்கியுள்ளன.

டாக்டர்கள் உலகெங்கும் ஹார்லிக்ஸை சிபாரிசு செய்வதில் வியப்பில்லை. இது குடும்பம் முழுவதற்குமே ஊட்டச்சத்து அளிக்கும் மூலாதாரமான பானம் என்று நிரூபிக்கப்பட்டது.



60 ஆண்டுகளுக்கு மேலாக தாத்தாவுக்கு பிரியமான ஆரோக்கிய பானம்.







சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA-5818 T

"எப்படா ட்ரீட் தரப்போறே?" என்றான் முத்துசாமி.

"நிச்சயதார்த்தம் முடியட்டுமே! எங்கே ஓடிப் போறேன்?" என்றான் ரமேஷ்.

"அதுலயே சந்தேகமா?" என்று சேது கேட்க, "அதுலே சந்தேகமே வேண்டாம். இதைவிட நல்ல மாப்பிள்ளை கிடைக்குமா? வரதட்சணை கிடையாது. மற்ற எந்த கண்டிஷனும் கிடையாது. இப்ப இப்படி ஒரு பேங்க் ஆபீசர் கிடைப்பாரா?" என்றான் முத்துசாமி.

அப்போது ப்யூன் வந்து ஃபோன் வந்திருப்பதாகச் சொன்னான். ரமேஷ் எழுந்து போனான்.

"ஹலோ" என்றான்.

"ஹலோ. நான் விஜயா பேசறேன்." ரமேஷ் அதிர்ந்தான். அவனுக்குப் பார்த்திருக்கும் பெண்.

"விஜயாவா?"

"ஏன் ஆச்சரியமாக இருக்கா?"

"இல்லே. ஆமா...." என்றான் ரமேஷ்.

"நான் உங்ககிட்ட கொஞ்சம் பேசணும்."

"சொல்லுங்க." என்றான். 'சொல்லு' என்றே சொல்லியிருக்கலாமோ?

"இப்ப இல்லே. சாயங்காலம் ஆபீஸ் முடிந்தவுடன் அசோகா ஹோட்டல் வாங்க, பேசலாம்."

ஃபோன் வைக்கப்பட்டு விட்டது. ரமேஷிற்கு ரொம்ப யோசனையாக இருந்தது. அவன் அவளை முன்பு எப்போதோ பார்த்தது. ஞாபகமேயில்லை. எல்லாம் அம்மா முடிவு செய்ததுதான். இன்னும் ஒரு வாரத்தில் நிச்சயதார்த்தம். இவள் எதற்குப் பார்க்க வேண்டுமென்கிறாள்? எங்கிருந்து பேசியிருப்பாள்? இங்கேதான் ஒரு கம்பெனியில் வேலை பார்க்கிறாள். சரி, சாயங்காலம் பார்ப்போமே!



"நீங்க யாரைக் கேட்டு இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிச்சீங்க...? எனக்கு இந்தக் கல்யாணத்துல இஷ்டமில்லே."

"ஏன்?"

"காரணத்தை உங்ககிட்டச் சொல்லணும்னு அவசியமில்லே!"

# காற்றில் பறந்த கவிதை

அவன் வீட்டுக்குத் திரும்பியதும் கேள்விகளால் துளைத்தார்கள்.

''ஃபோன்ல யாரு?''

''நத்திங்.''

''யாருடா சொல்லு?''

''ம். ஸ்ரீதேவி. கொஞ்ச நேரம் சும்மாயிரு'' என்றான். ஆபீஸ் முடிந்தவுடன், சேதுவிடமிருந்து கஷ்டப்பட்டுக் கழண்டு கொண்டான். அசோகா ஹோட்டல் போனான்.

அவள் முன்பே வந்திருந்தாள்... சமீபத்தில் போட்டோவில் பார்த்திருந்ததால், அடையாளம் கண்டுகொண்டான்.

''ஹாய், வினயா.''

''நான் உங்ககிட்டே என்ன சொல்லணும்னு....''

''இருங்க.. உள்ளே போய் நிதானமா பேசலாம்'' என்றான்.

சர்வரிடம் ஒரு லிஸ்டே ஆர்டர் பண்ணினான். அவளைப் பார்த்தான். தலை பின்னப்படவில்லை. இரண்டு புருவத்திற்கும் மத்தியில் சின்னதாய்ப் பொட்டு. மூக்குக் கண்ணாடி. நல்ல நிறம்.

''நான் இங்க சாப்பிட வரலே'' என்றாள்.

''சும்மா உட்கார்ந்து பேசினால், ஹோட்டல்காரன் உதைப்பான். சொல்லுங்க.''

''நீங்க யாரைக் கேட்டுட்டு, இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிச்சீங்க?'' என்று ஆரம்பிக்கையிலேயே அதிரடியாகக் கேட்டாள்.

''என்ன சொல்றீங்க?''

''என்னைக் கேட்க வேண்டாமா?''

''நான் எங்க அப்பா; அம்மா சொன்னபடிதான், சரின்னேன். உங்களை, உங்களை, உங்க அப்பா அம்மாதான் கேட்டிருக்கணும்.''

''உங்களுக்கு என்னைக் கேட்கணும்னு தோணலையா?''

''சாரி. தோணலே. மேலும் 'நம்மள்ள' இந்த மாதிரியான வழக்கங்கள் கிடையாதே!'' என்றான் ரமேஷ்.

''சாமண்ணு வழக்கங்கள்! எனக்கு இந்தக் கல்யாணத்துல இஷ்டமில்லே.'' என்றாள் வினயா.

ரமேஷ் அதிர்ந்தான்.

''நீங்க இதை, உங்க அப்பா, அம்மா கிட்டயே சொல்லியிருக்கலாமே.''

''சொன்னேன். அவங்க கேட்கலே. அதனால் நீங்கதான் என்னைப் பிடிக்கலேன்னு சொல்லி, கல்யாணத்தை நிறுத்தணும்.''

''ஏன்?''

''காரணத்தை உங்ககிட்ட சொல்லணும்னு அவசியம் இல்லே.''

''உங்களுக்கு, என்கிட்ட சொல்லணும்னு அவசியம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் நான் எங்க அப்பா அம்மாவிடம் காரணம் சொல்லணும். அவங்க என் மேல் வைத்திருக்கும் நம்பிக்கையைக் காப்பாற்றணும் இல்லையா?'' என்றான் ரமேஷ்!

''நான் ஏற்கெனவே ஒருத்தரைக் காதலிக்கிறேன்'' என்றாள் வினயா. ரமேஷ் நிமிர்ந்து பார்த்தான். எதிர்பார்த்ததுதான். காதலிப்பதைப் பெருமையாகச் சொல்வது போல் தோன்றியது. பலர் காதலிப்பதைத் தகுதியாக நினைக்கிறார்கள். காதல், புருவத்தை உயர்த்த வைக்கும் விஷயமோ சுளிக்கச் செய்யும் சமாசாரமோ அல்ல. அது ஓர் இயல்பான நிகழ்வு. ஆனால் நண்பர்கள் பலரைப் பார்த்திருக்கிறான். காதலுக்காக ஏங்குவதோ, அல்லது காதலிப்பதைப் பெருமையாகப் பேசுவதோ வழக்கமாகி விட்டது.

''...அதனாலே?''

''நான் அவரைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்.''

''இதையும் நீங்க உங்க அப்பா, அம்மா கிட்டச் சொல்லியிருக்கணும்.''

''சொன்னேன். அவங்க கேட்கலே. அதான் உங்ககிட்டே சொன்னால் கல்யாணத்தை நிறுத்திடுவீங்கன்னு வந்தேன்.''

''நான் கொஞ்சம் நிதானம் உள்ள ஆள். உங்க காதலைப் பத்திக் கொஞ்சம் சொல்லுங்க.''

''உங்களுக்கெல்லாம் காதலைப்பத்தி என்ன தெரியும்?''

இங்கு எல்லோரும் காதலைப் பற்றித் தனக்கு மட்டுமே தெரியும் என்று நினைப்பது விந்தை.

பிருதிவிராஜ்



"காதல் கடிதம் எழுத வாருங்கள்." என்று அறைகூவல் விடுத்து, போட்டியையும் வைத்துவிட்டது புனேவில் 'யுவ மஹேஸ்வரி' என்ற அமைப்பு. இந்தப் போட்டியில் கலந்து கொண்டவர்களில் பெரும்பாலோர் ஐம்பது வயதைக் கடந்து விட்டவர்கள்! காதலுக்கு வயது ஓர் வரம்பல்ல என்பதை இது நிரூபிக்கிறது. இதே அமைப்பு முன்பொருமுறை 'உடனடியாக அழும்' போட்டி வைத்தது. வென்றவர்கள் யார்? பெரும்பாலும் மனைவிமார்கள்தான்!

— ஆர். லதா.

"... அவர் ஒரு கவிஞர். 'கவி நேசன்' கேள்விப்பட்டிருக்கீங்களா?"

"இல்லே!"

"அவரோட கவிதைகள்னு எனக்கு உயிர்.

"புத்தன் முதல் காந்தி வரை தோற்கும் அளவிற்கு ஜாதிக்கு என்ன சக்தி இருக்கிறது' அப்படீங்கற வரிகள் எனக்கு ரொம்ப பிடிச்சது."

இவள் பாவம்! சினிமாவின் அப்பட்டமான பாதிப்பு.

"அவர் என்ன பண்றாரு?"

"கவிதை எழுதுவாரு. சினிமாவுக்குச் சான்ஸ் தேடறாரு."

"சுத்தம்.. வேலையில்லையா?"

"அவர் ஒண்ணும் சராசரி மனிதரில்லே."

"இந்தா பாருங்க. கவிதை, கதையெல்லாம் ஒண்ணும் ரொம்ப அசாதாரண விஷயமில்லே. இப்ப நாட்டில மூணு வீட்டுக்கு ஒரு கவிதை எழுதறவன், இரண்டு வீட்டுக்கு ஒரு காதலிக்கிறவன் இருக்கிறான். நிதானமா கொஞ்சம் யோசிங்க."

"யோசிக்க எதுவுமில்லே. தயவு செய்து நிச்சயதார்த்தத்தை நிறுத்துங்க."

"அதை எப்ப வேணும்னாலும் நிறுத்திக்கலாம். சினிமாதான் ரொம்ப பார்ப்பீங்க போலிருக்குதே. தாலிகட்டற வரை நிறுத்தலாம்."

"அதனால?" என்று கேட்டாள்.

"உங்க 'கவி நேசன்' இதற்கு என்ன சொன்னாரு?"

"அப்படியே இடிஞ்சு போயிட்டாரு."

"அப்புறம்?" என்றான் ரமேஷ்.

"சோகமாக இருந்தார்!"

"அப்புறம்?"

"கவிதை எழுதினார்."

"அப்புறம்?"

"நான் என்ன கதையா சொல்லிட்டிருக்கேன்?" என்றாள் கோபமாக.

"சரி! நேரா விஷயம் எங்கிட்டயே வந்தது நல்லதுதான். நீங்க அந்தக் 'கவி நேசன்' கிட்டப் போய், முடிவாப் பேசிட்டு வாங்க. வெள்ளிக்கிழமை நாம மீண்டும் இங்கே சந்திப்போம்."

வெளியே வந்தார்கள்.

"ஏங்க! இளம் உள்ளங்களே..." என்று அவள் ஆரம்பிக்க,

"இது ரோடு. ஸ்டுடியோ இல்லே" என்றான்.

"வெள்ளிக்கிழமை பார்ப்போம்" என்றான் ரமேஷ். அவளை பஸ்ஸில் ஏற்றி விட்டான். அவனுக்கு அமைதி தேவைப்பட்டது. யோசித்துக் கொண்டே காலாற நடந்தான்.

"ஏய்... உண்மையாகவா சொல்லறே?" என்று கேட்டான் முத்துசாமி.

"உண்மைதான். அன்னிக்கு அவகிட்டேயிருந்துதான் ஃபோன் வந்தது" என்றான் ரமேஷ்.

"அவ்வளவு தெளிவாகச் சொல்லியிருக்கு அந்தப் பொண்ணு. உடனே நிச்சயதார்த்தத்தை நிறுத்து."

"நிதானமா யோசி. இது குடும்ப கௌரவம் சம்பந்தப்பட்ட பிரச்னை."

"டேய், உன் வாழ்க்கைப் பிரச்னைடா. யாரையோ காதலிக்குதாம், உங்கிட்ட வேற வந்து சொல்லுது. இதுக்கு மேல் என்ன வேணும்?"

"இதெல்லாம் ஈவில் இன்ஃப்ளுயன்ஸ் ஆப் சினிமா. கொஞ்சம் பொறு. வெள்ளிக்கிழமை பார்ப்போம்" என்றான் ரமேஷ்.

**வி**னயாவிற்கு ஆச்சரியமாக இருந்தது. ரமேஷிடம் பேசியவுடன், நிச்சயதார்த்தம் நின்றுவிடும் என்று எதிர்பார்த்தாள். ரொம்ப நிதானமாகவே பேசுகிறான். அதுவும் சரிதான். கவிநேசனிடம் பேசிப் பார்க்க வேண்டும்.

"ஏன் லேட்?" என்று கேட்ட அம்மாவிடம் அதிகம் பேசாமல், முகத்தைக் கழுவி விட்டு, படுத்துக் கொண்டு பாட்டு கேட்க ஆரம்பித்தாள்.

மறுநாள் கவிநேசனை வழக்கமாகச் சந்திக்கும் இடத்தில் போய்ப் பார்த்தாள். கையில் ஒரு பேடுடன் கவிதை எழுதிக் கொண்டிருந்தான்.

"வா. உட்கார். நேற்று ஆளையே காணோம்?"

"இருக்கட்டும். ஏதாவது யோசிச்சீங்களா?"

"ஆமா. புதுசா 'புரட்சி'ன்னு ஒரு கவிதை. 'நம் நாட்டில் நடந்து விட்டது ஆகஸ்டு புரட்சி. நடக்க வேண்டியது அக்டோபர் புரட்சி.' எப்படி இருக்குது?"

# விடா முயற்சி



ஏழை விறகு வெட்டியின் மகனாகப் பிறந்து, தனது விடா முயற்சியால் அமெரிக்காவின் ஜனாதிபதியானார் ஆப்பிரஹாம் லிங்கன். கற்பலகை வாங்குவதற்குக் கூட கையில் காசில்லாது மண்வெட்டியில் சுண்ணாம்புக் கட்டியால் எழுதிக் கல்வி கற்றார். வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற திடமான குறிக்கோளுடன் செயல்பட்ட போது அவர் சந்தித்த தோல்விகளோ ஏராளம். ஆனால் விடா முயற்சியுடன் முயன்று இறுதியில் வெற்றி பெற்றார்.

இரண்டு முறை அமெரிக்க ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அவரது பெயர் உலக வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளது.

உயர்ந்த குறிக்கோளும், விடா முயற்சியும் இருந்தால் இந்த உலகில் எதையும் சாதிக்கலாம் என்பதை ஆப்பிரஹாம் லிங்கனின் வாழ்க்கை வரலாறு நிரூபித்துக் காட்டியுள்ளது.

நம்மில் பலர் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்று விரும்புகிறோம். நமது முன்னேற்றத்திற்கு இன்று உறுதுணையாக இருப்பது ஆங்கில அறிவு என்பதும் நமக்குத் தெரியும். ஆனால் ஒரு சிலர் ஓரளவு படித்திருந்தும் ஆங்கிலத்தில் மற்றவர்களிடம் உரையாட முடியவில்லையே என்று வருந்துகிறார்கள். தவறாகப் பேசிவிடுவோமோ என்ற பயமும், முறையான பயிற்சியின்மையுமே இதற்கு மூல காரணமாகும்.

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற "விவேகானந்தா கல்வி நிலையத்தினர்" எளிய தமிழ் மூலம் ஆங்கிலத்தில் இலக்கணப் பிழையின்றிக் கடிதங்கள், கட்டுரைகள் எழுதவும், அடுத்தவர்கள் வியக்கும் வண்ணம் சரளமாக உரையாடவும், தபால்மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு. எனவே இப்பயிற்சி பற்றி மேலும் தகவல் அறிய கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு பயிற்சியில் சேர்ந்து நீங்களும் பயன் பெறலாமே.

**விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)**
**9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-600 017.**

# நியூட்ரமுல்

## வீரர்களை உருவாக்குகிறது–




மிக நேர்த்தியான பால், மால்ட்,
கோக்கோ இவற்றின் சேர்க்கையே
போதும்...நியூட்ரமுல்
பரம்பரையின் சக்திக்கு!
நியூட்ரமுல் எல்லா
வீரர்களின் உடலும்
உள்ளமும் உரம்
பெற!

**ஒவ்வொரு
கோப்பையும்
உரமூட்டும்**

daCunha/GCM/147/88/TAM

என்று கேட்டான்.

"ஐயோ. நான் கவிதையைக் கேட்கலே. என் கல்யாணத்தை நிறுத்த ஏதாவது யோசனை செய்தீங்களா?"

"இது நம்ம இரண்டு பேரோட தனிப்பட்ட பிரச்னையில்லே. ஒட்டு மொத்த சமுதாய அமைப்பே மாற வேண்டும்!"

"அது சரிங்க. இப்ப நாம் என்ன செய்யலாம்?"

"ஆதிக்க வர்க்க பெற்றோர்களை, எதிர்த்து, நாம என்ன செய்ய முடியும்?"

வினயாவிற்கு எரிச்சல் வந்தது.

"இப்ப என்னதான் சொல்றீங்க?"

"அப்படியே மனசுல ஒரு கவிதை ஓடியது.....

'காதல் கல்லறையில் சிரிக்கும் ஜாதி மாளிகையைச் சரிப்போம்!' எப்படி?" என்றான்.

வினயாவிற்கு ஆத்திரமாக வந்தது.

"சரமண்ணு! கவிதையாம் கவிதை. பிரச்னைக்குத் தீர்வு கேட்டா, பேப்பரைக் கொடுக்கறீங்க?"

விட்டெறிந்தாள். காற்றில் கவிதை பறந்தது.

"என்னோட கவிதையை மதிக்கத் தெரியாத நீயெல்லாம் ஞானசூன்யம். இனி என்னைப் பார்க்க வராதே. என்னை மறந்துடு" என்று கோபமாய்ப் பேசினான் கவிநேசன்.

வினயாவிற்கு எல்லாம் புரிந்தது. ஆத்திரத்தில் கவிதையை எறிந்தது தவறுதான். ஆனால் அது காரணமல்ல. அவன் ஓடுவது பிரச்னையைக் கண்டு. அவன் காகிதத்தில் மட்டுமே பிரச்னைகளை விரும்புகிறான். வாழ்க்கையில் அல்ல.

வினயா இரவு முழுவதும் யோசித்தாள். எவ்வளவு நிதானமில்லாமல் இருந்து விட்டோம்! தீர்மானமாக முடிவிற்கு வந்தாள்.

ரமேஷ் ஃபோனை எடுத்தான்.

"ஹலோ, நான் வினயா பேசறேன்."

"என்னங்க, நாளைக்குத்தானே பேசறேன்னீங்க."

"பரவாயில்லே. சாயங்காலம் 'காயத்ரி' கிட்ட நில்லுங்க. வர்றேன்."

"அந்தப் பொண்ணுகிட்ட போய் நின்னு, உதைக்கும்!"

"சும்மா கடிக்காதீங்க. ஹோட்டல் காயத்ரி கிட்ட நில்லுங்க."

ரமேஷ் போகக் கொஞ்சம் லேட்டானது. வினயா முன்பே நின்று கொண்டிருந்தாள். உள்ளே போய் உட்கார்ந்த பிறகு நிதானமாக ஆரம்பித்தாள்.

"நான் கொஞ்சம் அவசரப்பட்டுட்டேன். நான் பண்ணினது தப்பு. தயவுசெய்து நிச்சயதார்த்தத்தை நிறுத்திடாதீங்க. என்னோட மானமே இப்ப உங்க கையில்" என்றாள்.

ரமேஷ் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். "என்னங்க! ஒண்ணும் சொல்ல மாட்டேன்றீங்க!"

"அவசரப்படாதீங்க. நிதானத்தைத்தான் நான் ரொம்ப வலியுறுத்தறேன். நிச்சயதார்த்தத்தை நிறுத்த மாட்டேன். உங்களை நான் நல்லா புரிஞ்சுட்டிருக்கேன்" என்று ரமேஷ் சொன்னவுடன், வினயா சந்தோஷமாகச் சிரித்தாள்.

## அடுத்த இதழில்...

**21 — ஆம் நூற்றாண்டை நோக்கி...** — கவர் ஸ்டோரி







# அக்னி நட்சத்திரம்

ஒரே அப்பா. இரண்டு அம்மா. பிரபு. லைசென்ஸோடு பிறந்த பிள்ளை. கார்த்திக் ஸ்டெப்னி மகன். இரண்டு பேருக்கும் இடையில் வன்மம், வெறுப்பு, புகைச்சல். அப்பாவுக்கு ஆபத்து என்று வரும்போது மட்டும் கைகோத்துக் கொள்கிறார்கள்.

இந்தக் கதையை அப்படியே ஊறுகாய் பாட்டிலில் போட்டு வைத்து, அவ்வப்போது தொட்டுக் கொள்கிறார்கள். மற்றபடி...

ஒரு தீக்குச்சியை உரசுங்கள். நெருப்புப் பிடித்துக் கொள்ளும் நேரம் கூட ஆகவில்லை பிரபு — அமலா, 'ஐ லவ் யூ' சொல்லிக் கொள்ள. தீக்குச்சியை எடுக்கும் நேரம் கூட வேண்டாம் என்கிறார்கள் கார்த்திக்கும் நிரோஷாவும். இரண்டுமே கண்டதும் காதலாய் அமைந்து விட்டதால், கிளுகிளுப்புக்கு — கூப்பிடு பாடல்களை!

ஆறு பாடல்கள். தேனில் தோய்த்து, சர்க்கரை தூவி, இளையராஜா கொடுத்து விட்டார். காமிராவின் லென்ஸை தீட்சண்யமாகத் தீட்டிக் கொண்டு ஸ்ரீராம் தயார். கேட்க வேண்டுமா? பாடல்களும் அக்காட்சிகளைப் படமாக்கியிருக்கும் விதமும் இன்னும் கண்களிலே விளையாடி, காதுகளிலே ரீங்காரம் செய்கின்றன. அதுவும் குறிப்பாய் — 'ஒரு பூங்காவனம்' பாடல்!

குதிரைகள் மிரண்டு பின்னணியில் ஓடிக் கொண்டிருக்க பிரபுவும், கார்த்திக்கும் போடும் சண்டை; க்ளைமாக்ஸில் ஆம்புலன்ஸை வில்லன்கள் துரத்தி நெருப்பு வைக்கும் பரபரப்பு — இன்னும் எத்தனையோ சீன்கள் கச்சிதம்.

சற்றே திகட்டிப் போகும் காமிராவின் பிரத்தியேக நடை.

தர்மசங்கட அப்பாவாக விஜயகுமார் — அழுத்தமான நிதானம். முதல் மனைவி சுமித்ரா — என்ன பதவிசு? நம்பர் டூவாய் ஜெயசித்ரா — என்ன நறுவிசு! வில்லனாய் — சாதுவான டயலாகைப் பேசியே கழுத்தில் கத்தி வைக்கும் ஜி. உமாபதி. ஆச்சரியமான கம்பீரம். அமலாவின் தைரியமான டிரெஸ்களில் இந்திக்குப் போகும் அவசரம். நிரோஷாவின் கண்களில் இருக்கும் அழைப்பில் கண்ணியம் தோற்கிறது.

மணிரத்தினம் சுவிசேரில் சாய்ந்து கொண்டு, படத்தைச் சுதந்திரமாக, இஷ்டத்திற்குப் போகவிட்டு டைரக்ட் செய்திருக்கிறார்.

படம் முடிந்து கிளம்பும் போது முன் வரிசையில் யாரோ குனிந்து நாற்காலிக்கடியில் தேடிக் கொண்டிருந்தார்.

"என்ன சார் தேடறீங்க?"

"கதை!"





## ஒரு C.B.I. டைரி குறிப்பு.

ஒரு பெண்ணின் மரணம் தற்கொலையா, கொலையா என்பது பற்றி போலீஸ் விசாரணை. லோக்கல் போலீஸை பெரிய மனிதர்கள் விலைக்கு வாங்கிய பின், சி.பி.ஐ.யின் நேர்மையான அதிகாரிகள் உண்மைக் கொலைகாரனைக் கண்டுபிடிப்பது பற்றிய கதை.

கதையை மிகச் சரியாகத் திட்டமிட்டிருப்பதில், விசாரணைக் காட்சிகள் கூட போரடிக்கவில்லை.

இந்த மலையாளப் படத்தின் கதை, திரைக்கதை எஸ். என். ஸ்வாமி, டைரக்ஷன் கே. மது. இருவருக்குமே ஸ்பெஷல் மாலைகள் போடலாம்.

— ஜெயமன்மதன்




## தளபதி திடமதி:

தொண்டர்: தலைவரே, தேசிய நீரோட்டம்னு என்ன? பிரதேசப் பற்று என்றால் என்ன?

திடமதி: இது தெரியாதா? கோடிக்கணக்கில், நிதி வசூலிச்சா, தேசிய நீரோட்டம், லட்சக்கணக்கில் நிதி வசூலிச்சா பிர தேசப் பற்று!

— கே. சுப்பிரமணியன், ரெட்டியார் சத்திரம்.

ஆளுநருக்கு....



ஆண்மையிருந்தால்....!

தொண்டர்: உங்களுக்கு ரொம்ப இளகின மனசுங்க; மச்சான் வீடு ஏலத்துக்கு வந்ததுக்கு இவ்வளவு வருத்தப்படறீங்களே!

திடமதி: நீ வேற வயிற்றெரிச்சலைக் கிளப்பாதேய்யா; அந்த வீடு என்னுது. அவன் வெறும் பினாமிதான்!

— கே. குணசுந்தரி, தஞ்சை.

"இந்த ஆளுனருக்கு ஆண்மையிருந்தால், ரோஷமிருந்தால் எங்களுடன் தேர்தல் களத்தில் மோதி வெற்றி பெற்று ஆட்சிக்கு வரக் கூடாதா? அதை விடுத்துப் புறவாசல் வழியாக வந்து ஆட்சியைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதை வன்மையாகக் கண்டிக்கிறேன்!"

— மு. கோகுலன், சென்னை — 81.

"தேர்தல் நிதி என்று சொல்லி கட்சியில் எக்கச் சக்கமாகப் பணம் குவித்துக் கொண்டிருப்பதாகக் குற்றம் சாட்டும் எதிர்க் கட்சியினர் புரியாமல் பேசுகிறார்கள்! நாங்கள் என்ன பணத்தை விழுங்கி விடவா போகிறோம்? வோட்டுக்களைப் பெற மக்களிடம் விநியோகித்து மக்களுக்குத்தானே உதவுகிறோம்? எங்கள் பொதுவுடைமை நோக்கு பாராட்டுக்குரியதல்லவா?"

— உ. ரா. ராஜேந்திரன், உத்திரமேரூர்.




பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 380/—; விமானத் தபால் ரூ. 680/—.

ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

நான் ஸின்த்தால் உபயோகிக்கிறேன். நீங்கள்?




வினோதின் உடலுக்கும் உள்ளத்திற்கும் தன்னம்பிக்கை தருவது ஸின்த்தால்.

MADISON-C-001-TAM

REGISTERED No. M. 4382
Registered as a Newspaper in Sri Lanka